யாதொரு பிரதிப் பலனையும், செல்வம், கௌரவம், பதவி முதலியவற்றையும் எதிர்பாராமல், மனித குலத்திற்கு இவர்கள் செய்த இந்த சேவையை, சீர்தூக்கிப் பார்த்தலென்பது முடியாததாகும்.

இவை எப்படி நடந்தன, நமது முன்னோர்களில் எத்தனை ரிஷிகளுக்கும், முனிவர்களுக்கும் இந்த தெய்வீக சக்தி கிட்டியது? எவ்வளவு பேர் இதை சுவடி வடிவில் அமைக்க முயன்றிருக்கிறார்கள்? இது எவ்வளவு காலம் பிடித்திருக்கும், எழுத்து வடிவத்தில் அமைக்க என்ன கருவிகள் உபயோகித்திருக்கக் கூடும்? எழுத்து வடிவத்தில் இயற்றியதற்கு பிறகு அவைகளை காப்பாற்ற என்ன வழிமுறைகள் கையாண்டிருக்கக்கூடும்? இயற்றிய இந்த சோதிடக்கலையை நாடி வருபவர்களுக்காக என்ன திட்டங்கள் வகுத்திருக்கக் கூடும்? தங்கள் வருங் காலத்தை அறிய முற்படுபவர்களுக்கு அவர்கள் சம்பந்த பகுதியை தேடுவதற்கு எவ்விதம் ஒரு அட்டவணை (Index) தயாரித்திருக்கக் கூடும்? இம்மாதிரி அநேக கேள்விகள் மனதில் எழக்கூடும்.

நாடி சோதிட இலக்கியம் சம்பந்தமாக, சில நாடி சோதிடர்களுடன் விவாதித்தும், சில புத்தகங்களை படித்ததாலும், சில கேள்விகள் எழுந்தன. இதன் மூலமாக எனக்குள் ஒரு எண்ணம் தோன்றியது. அகத்திய முனிவரோ, அவரைப் போன்ற முனிவர்கள் பலவேறு காலங்களில் பலவேறு இடங்களில் குரு குலங்களை ஏற்படுத்தியிருக்கக்கூடும். ஆத்ம சிந்தனை, வேதங்கள் சாஸ்திரங்கள் முதலிய கடினமான கல்வியை போதிக்கும் மூலமாக ஏற்படும் களைப்பு அல்லது சோர்வை நீக்குவதற்காக, ஆயுர்வேதம், சோதிடம், சங்கீதம், ஆடற்கலை, ஓவியம் முதலிய விஷயங்களையும் போதித்திருக்கக்கூடும். சில மாணவர்கள் அவற்றில் மிகுந்த தேர்ச்சியும் பெற்றிருக்கலாம். அரச சபைகளிலும், பல மேடைகளிலும் தேர்ச்சி பெற்ற இந்த மாணவர்கள் மூலமாக இவை குறித்தான விவாதங்கள், விளக்கங்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்திருக்கலாம். இந்த சிறந்த மாணவர்கள் மூலமாக இந்த ஞானங்களை யானது, மனித குல மேன்மைக்காக, உபயோகப் படும் பொருட்டு, இந்த குருகுல மாணவப் பிரமுகர்களால், இந்த நாடி சோதிடக்கலையும், தோன்றியிருக்கக் கூடும்.

குருகுலத்திலுள்ள தன்னுடைய 200/300 மாணவர்களை முன்னிட்டு, அவர்களை ஒரு சமுதாய மனநிலையில் நிறுத்தியிருக்க வேண்டும். பிறகு யோகக் கலையில் கைதேர்ந்த இந்த மாணவர்கள் தங்களுடைய குருவைப் போலவே வல்லவர்களானார்கள். இதனால் தனித் தனியாக மனிதர்களின் கடந்த காலத்தையும், நிகழ் காலத்தையும் கணிப்பதில் அவர்களைப்போலவே வல்லவரானார்கள். சில மாணவர்கள், தங்களை 2/2, 3/3 குழுவினராக சேர்ந்து, தங்களால் கேட்கப்பட்ட செய்திகளை எழுத்து வடிவில் கொண்டு வந்திருக்கலாம். தியான நிலையில் மிகக்குறைந்த நேரமே இருந்ததால், ஒவ்வொருவரும் 10 மனிதர்களின் வருங்காலத்தை ஆராய்ந்து எழுதியிருக்கலாம். பின்னால் தங்களுக்குள் விவாதித்து நிறை குறைகளை பூர்த்தி செய்திருக்க வேண்டும்.

சில மாணவர்கள், காட்டிலேயே இருந்த காரணத்தினால், பனை ஓலைகளை ஒரே மாதிரியாக கத்தரித்து, சில ரசாயன முறையில் வழுவழுப்பான காகிதங்கள் போல் செய்திருக் கலாம்.

மேலும் சில தேர்ந்த மாணவர்கள், தமிழில் இம் மாதிரி ஓலைச்சுவடிகளைத் தயாரித்திருக்கக் கூடும். மேலும் ரேகைக்கேற்ப, அவைகளை வகைப்படுத்தி, தனித் தனி ஓலைச்சுவடிக் கட்டுகளாக, இரண்டு பலகைகளின் நடுவே 50,60 சுவடிகளாக வைத்து, கயிற்றினால் அவைகளைக் கட்டியிருக்கலாம். இவ்விதம் எழுதுபவர்களுக்கு, யாரோ ஒருவரின் மூலமாக தாங்கள் எழுதுவதாக அனுபவம் ஏற்பட்டிருக்கலாம்.

இவ்விதம் தயாரிக்கப்பட்ட ஓலைச்சுவடிகளை காப்பாற்றுவதற்காக, அரசர்கள் உதவியிருக்கக் கூடும். இந்த அரசர்களில் சிலர் முனிவர்களின் மாணவர்களாகவும் இருந்திருக்கக் கூடும். இவர்கள் மூலமாக இந்த ஓலைச் சுவடிகள் கோயில்களில் வைத்து காப்பாற்றப்பட்டிருக்கலாம். பல குரு குலங்களில் இம்மாதிரி ஓலைச்சுவடிகள் வருடக் கணக்காக தயாரிக்கப் பட்டு, பல்லாயிரக்கணக்கான மனிதர்களின் ஓலைகள் தயாரிக்கப்பட்டிருக்கக் கூடும்.

நாட்கள் செல்லச் செல்ல, இம்மாதிரி குருகுலங்கள் நசிந்ததாலும், கருத்து வேற்றுமைகள், இயற்கை விபத்துகள், கோயில்களில் பூசாரிகளிடையே பூசல், அரசர்களுக்குள் சண்டை முதலிய தடைகளுக்கும் இடையே இன்றும் இந்த ஓலைச்சுவடிகள் நமக்கு கிடைத்திருக்கின்றன என்றால் இவற்றின் மகிமையைச் சொல்லவும் வேண்டுமோ?

சில சமயங்களில் பனை ஓலைகள் சமயத்தில் கிடைக்காத காரணத்தினாலும், நேரம் காரணமாக சாதாரண எழுத்திலிருந்து எழுத்துக்களை ஓலைகளில் வடிவமைப்பதிலுமான தடைகள், அவசரத்தின் காரணமாக சில தவறுகள் ஏற்பட்டிருப்பது சகஜமே. இப்படிப் பட்ட ஒரு மகத்தான காரியத்தில், சில தவறுகள் ஏற்படுவது இயற்கையே.

இம் மாதிரி பாதுகாக்கப்பட்ட இந்த நாடி சோதிடம், குறிப்பிட்ட மனிதனிடம், அவனுடைய வருங்காலத்தை அறியும் பொருட்டு அதனை நாடிச் செல்வதற்கான ஒரு திட்டமும் திட்டமிடப்பட்டிருக்க வேண்டும்.

இம்மாதிரியாக குரு குலங்களில் தயாரிக்கப்பட்ட ஓலைச்சுவடிகள் முன்னால் சொல்லப்பட்ட இன்ன பல காரணங்களினால் பல வேறு இடங்களில் சேமித்து வைக்கப்பட்டிருக்க வேண்டும். மேலும் சில ஓலைச்சுவடிகள் இடைக்காலத்தில் தோன்றிய படையெடுப்புகளினால் நஷ்டமாயிருக்கலாம். இந்தக் குறைகள் இருந்தபோதிலும், இந்த நாடி சோதிடமானது இன்றும் வருங்காலத்தை கணித்து சொல்வதில் முற்றிலும் தகுதி பெற்றிருக்கிறது.

இம்மாதிரி சூழ் நிலையில், நாடி சோதிடத்தின் பால் அவநம்பிக்கை கொள்ளுதல் எப்படி சாத்தியமாகும்?.



## தமிழ் மாதங்களும் ராசிகளும்

| எண் | மாதம் | ராசி | எண் | மாதம் | ராசி |
|---|---|---|---|---|---|
| 1. | சித்திரை | மேஷம் | 7. | ஐப்பசி | துலாம் |
| 2. | வைகாசி | ரிஷபம் | 8. | கார்த்திகை | விருச்சிகம் |
| 3. | ஆனி | மிதுனம் | 9. | மார்கழி | தனுசு |
| 4. | ஆடி | கடகம் | 10. | தை | மகரம் |
| 5. | ஆவணி | சிம்மம் | 11. | மாசி | கும்பம் |
| 6. | புரட்டாசி | கன்னி | 12. | பங்குனி | மீனம் |

## திதிகளின் பெயர்கள்

| எண் | திதிகள் | எண் | திதிகள் |
|---|---|---|---|
| 1. | ப்ரதமை | 9. | நவமி |
| 2. | த்விதியை | 10. | தசமி |
| 3. | த்ருதியை | 11. | ஏகாதசி |
| 4. | சதுர்த்தி | 12. | த்வாதசி |
| 5. | பஞ்சமி | 13. | த்ரயோதசி |
| 6. | சஷ்டி | 14. | சதுர்தசி |
| 7. | சப்தமி | 15. | பௌர்ணமி<br>அமாவாசை |
| 8. | அஷ்டமி | | |

## நவகிரகங்களும் கிழமைகளும்

| நவகிரகங்கள் | கிழமைகள் |
|---|---|
| சூரியன் | ஞாயிறு |
| சந்திரன் | திங்கள் |
| செவ்வாய் | செவ்வாய் |
| புதன் | புதன் |
| வியாழன் | வியாழன் |
| வெள்ளி | வெள்ளி |
| சனி | சனி |
| ராகு | — |
| கேது | — |

## நட்சத்திரங்களின் பெயர்கள்

| எண் | நட்சத்திரம் | எண் | நட்சத்திரம் | எண் | நட்சத்திரம் |
|---|---|---|---|---|---|
| 1. | அசுவனி | 10. | மகம் | 19. | மூலம் |
| 2. | பரணி | 11. | பூரம் | 20. | பூராடம் |
| 3. | கார்த்திகை | 12. | உத்திரம் | 21. | உத்திராடம் |
| 4. | ரோகிணி | 13. | அஸ்தம் | 22. | திருவோணம் |
| 5. | மிருகசீர்ஷம் | 14. | சித்திரை | 23. | அவிட்டம் |
| 6. | திருவாதிரை | 15. | சுவாதி | 24. | சதயம் |
| 7. | புனர் பூசம் | 16. | விசாகம் | 25. | பூரட்டாதி |
| 8. | பூசம் | 17. | அனுஷம் | 26. | உத்ரட்டாதி |
| 9. | ஆயில்யம் | 18. | கேட்டை | 27. | ரேவதி |

## தமிழ் வருடங்களின் பெயர்கள் - 60

| | | | | | |
|---|---|---|---|---|---|
| யுவ { 1935-36, 1995-96 | பார்த்திப 45-46 | மன்மத 55-56 | விசுவாவசு 65-66 | இராக்ஷஸ 75-76 | குரோதன 85-86 |
| தாது 36-37 | விய 46-47 | துன்முகி 56-57 | பராபவ 66-67 | நள 76-77 | அக்ஷய 86-87 |
| ஈஸ்வர 37-38 | சர்வசித்து 47-48 | ஹேவிளம்பி 57-58 | பிலவங்க 67-68 | பிங்கள 77-78 | பிரபவ 87-88 |
| வெகுதான்ய 38-39 | சர்வதாரி 48-49 | விளம்பி 58-59 | கீலக 68-69 | காளயுத்தி 78-79 | விபவ 88-89 |
| பிரமாதி 39-40 | விரோதி 49-50 | விகாரி 59-60 | சௌமிய 69-70 | சித்தார்த்தி 79-80 | சுக்கில 89-90 |
| விக்ரம 40-41 | விக்ருதி 50-51 | சார்வரி 60-61 | சாதாரண 70-71 | ரௌத்திரி 80-81 | பிரமோதூத 90-91 |
| விஷு 41-42 | கர 51-52 | பிலவ 61-62 | விரோதிகிருது 71-72 | துன்மதி 81-82 | பிரஜோற்பத்தி 91-92 |
| சித்திரபானு 42-43 | நந்தன 52-53 | சுபகிருது 62-63 | பரிதாபி 72-73 | துந்துபி 82-83 | ஆங்கீரஸ 92-93 |
| சுபானு 43-44 | விஜய 53-54 | சோபகிருது 63-64 | பிரமாதீச 73-74 | ருத்ரோத்காரி 83-84 | ஸ்ரீமுக 93-94 |
| தாரண 44-45 | ஜய 54-55 | குரோதி 64-65 | ஆனந்த 74-75 | ரக்தாக்ஷி 84-85 | பவ 94-95 |

எவ்வாறு நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது என்பதை அறியும் போது இந்த கூற்று எவ்வாறு பொருந்தும். கேவலம் ஒரு கட்டை விரல் ரேகையை மட்டும் வைத்துக் கொண்டு ஒரு ஜாதகனின் பெயர், ஊர் முதலியன சொல்லக்கூடிய எந்த ஒரு சோதிடனும், அவன் மரத்தடி ஜோசியனா யிருந்தாலும்,பத்திரிகை ஜோசியனாயிருந்தாலும் சரி, தொலைகாட்சி ஜோதிடனா யிருந்தாலும் சரி, அவனால் முடியுமா? அது இந்த ஆச்சரியகரமான கணிப்பு நாடி சோதிடன் ஒருவனால் தான் முடியும், உண்மை என்னவென்றால், இந்த ஆச்சரியகரமான முறை தான், நாடி சோதிடம்பால் இந்த ஆசிரியருக்கு ஒரு ஈாப்பு ஏற்பட காரணமா யிருந்தது. சாதாரணமாக இந்த ஆசிரியர் பத்திரிகைகளிலோ, தினத்தாள்களிலோ, மாதப் பத்திரிகைகளில் வரும் சோதிடம் குறித்து கண்ணெடுத்தும் பார்க்கும் வழக்கமில்லை.

டாக்டர் நாகராஜ சர்மாவின் சப்தரிஷி நாடியில் ஜாதகரின் பெயர் முதலியன அறிய முடியாமலிருக்கலாம். ஜென்ம நட்சத்திரம் மேலும் கிரகங்களின் நிலையின்படி ஒவ்வொரு ஜாதகரின் வாழ்க்கை எப்போது முடியும் என்பது கூட கணிக்கப் படலாம். ஒரு இடத்தில் சப்தரிஷி நாடியில் வர்ணிக்கப்பட்ட சில ஆருடங்கள் மிகவும் கடினமான மொழியில் இருக்கின்றன. அகஸ்தியர், வசிஷ்டர், சுகர், ப்ருகு, தூர்ய நாடியில் ஜாதகனின் பெயர் எப்படி தெரிய வருகிறது என்பதற்கு திரு.நாகராஜ சர்மா மௌனம் சாதிக்கிறார்.

சாதாரணமாக இந்த முறையில் சில சம்ஹிதைகள் இந்தி, மராத்தி மேலும் இதர பாஷைகளில் புத்தக வடிவில் காணப்படுகின்றன. ஒவ்வொன்றும் அதில் சொல்லப்பட்டிருப்பவை உண்மை என்று சொல்கின்றன. அந்த புத்தகங்களின் ஆரம்பத்தில் பல பக்கங்களில் பல வேறு வருடங்களில் பிறந்த ஜாதகர்களின் ஜாதகங்கள் நிரம்பியுள்ளதாக காணப்படு கின்றன. அவைகளுக்கு எண் கொடுக்கப்படுகிறது. தங்கள் தங்களுடைய ஜாதகத்துடன் அவற்றை இணைத்து, கொடுக்கப்பட்டுள்ள எண் படி அதன் எதிரே கொடுக்கப் பட்டுள்ள பலன்களை பார்த்துக் கொள்ள வேண்டும். புத்தகத்தில் எந்த ஒரு ஜாதகரின் தாய் தந்தையர் பெயர், மனைவியின் பெயர், பிறந்த தேதி, மாதம், வருடம் முதலியன கொடுக்கபட வில்லை. இரண்டு நிமிடங்களில் படிக்கத்தகுந்த வாறு ஒரே பக்கத்தில் முடிந்து விடுகின்றது. அதில் குறிப்பிடப்பட்டுள்ள சில சம்பவங்கள், நடந்ததும், நடக்கப் போவதும் ஓரளவுதான் சரியாக இருக்கின்றன.

பங்களூரில் பிரகாசிக்கப்படும் Astrological Magazine-ன் சோதிடக் கலை வல்லுனரும் ஆசிரியருமான DR. B.V. ராமன் 1970 Sep, Oct-ல் இந்து சோதிட சாஸ்திரம் பற்றி பேசுவதற்கு லண்டனுக்கு அழைக்கப் பெற்றார். ஒரு சொற்பொழிவில் அவர் நாடி சோதிட சாஸ்திரம் பற்றியும் பேசியுள்ளார். அவை சோதிட சாஸ்திரத்தில் தலை சிறந்த வித்வானாயிருந்த காரணத்தினால், அவருடைய பேச்சு முழுவதும் நாடி சோதிடத்தில் வர்ணிக்கப்பட்ட விஷயத்தைக் குறித்தும், அது எவ்வாறு மற்ற சோதிடத்துடன் பொருந்துகிறது என்பதைப் பற்றியதாயிருந்தது. நாடி சோதிடம் சித்தர்களால் எழுதப்பட் காரணத்தினால் அது மேலும் சிறப்பு வாய்ந்ததும் தெய்வீக சக்தியினால் இயற்றப் பட்டதாகும், என்று அவர் மேலும் சொன்னார். அவர் மேலும் சொல்வதாவது கடந்த 20 வருடங்களாக நான் நாடி சோதிடத்தைப் பயின்று வருகிறேன். 1972ல் நான் ஒரு புத்தகம் எழுதப் போகிறேன். (ஆனால் இன்று வரை என்ன புத்தகம் அவரெழுதினார், அதன் பெயர் என்ன என்று இதுவரை தெரியவில்லை). இந்த நாடி சாஸ்திரம் நம்முடைய ஹிந்து கலாசாரத்தை பிரதிபலிக்கும் சிறந்த சாகித்யமாகும்.

ஐரோப்பாவில் இவ்விதம் கருதப்படுகிறது. அலெக்ஸாண்டிரியா (எகிப்து தேசத்தில்) இருக்கும் புராதன புத்த காலயத்தில் தீப்பிடித்ததற்கு பிறகு, அந்த சமயத்திலிருந்த அநேக சாஸ்திரங்களின் அறிவுக் களஞ்சியம் எரிந்து சாம்பலாகிவிட்டது. தற்போதுள்ள மனிதன் அந்த சாஸ்திரங்களினால் எற்படக்கூடிய அறிவை நிரந்தரமாக இழந்து விட்டான். ஆனாலும் நான் மிக்க பெருமையுடன் சொல்ல ஆசைப்படுவது என்னவென்றால் இம்மாதிரி அநேக சாத்திரங்களின் அறிவுக் களஞ்சியங்கள் இந்தியாவில் இப்போதும் முழுவதுமாக காப்பாற்றப் பட்டிருக்கிறது. அம்மாதிரியான ஒரு மனித குலத்திற்கு மிக்க பயன்படும் இந்த நாடி சாத்திரமாகும். இந்த இலக்கியத்தை மிக்க ஆழ்ந்து படித்தால் பராசரரும் மற்ற முனிவர்களால் சொல்லப்பட்ட யோக, கிரகபலன்கள், ஜாதகங்களை கணித்தல் முதலியவற்றில் ஏற்பட்ட எண்ணங்களினால் நாடி சோதிடர்கள் லாபம் அடைந்திருக்கலாம். மிக்க பெருமளவில் இயற்றப்பட்ட இந்த இலக்கியமானது, சுருக்கமாகவும், எழுத்து மூலமும் கொடுக்கப் பட்டிருப்பதன் காரணமாக, மிகவும் சுலபமாக்கப் பட்டிருக்கிறது.

எனது பாட்டனார் காலஞ்சென்ற தூர்ய நாராயணராவ் 60 வருடத்திற்கு முன் (1910க்கு சமீபம்) ஒரு நாடி சோதிடம் பார்த்தார். அதற்கு பிறகு நான் புதன், சுக்கிரன், சரஸ்வதி, சத்ய, சந்திர நாடியைப் படித்தேன்.

ஸ்ரீ S. கண்ணன் 1968-69ல் அஸ்ட்ராலஜிகல் மாகஸீனில் (சோதிடப் பத்திரிகை) 10 கட்டுரைகளடங்கிய ஒரு தொகுப்பை எழுதியுள்ளார். (தற்சமயம் அவர் எங்கு உள்ளார் என்று தெரியவில்லை). அவர் ஒரு இடத்தில் சொல்வதாவது "1952ல் நான் கோபாலகிருஷ்ண ராவுடன் நாடி சாஸ்திரம் குறித்து விவாதித்துள்ளேன். ஸ்ரீ ராவ மீனா(மீனாட்சி) நாடி இயற்றியவர்". அவர் சொன்னதாவது, புத நாடியில் இது விஷயமாக புத நாடி சோதிடர் ஸ்ரீனிவாசாரியார் இவ்விதம் சொல்கிறார், சில நாடி இலக்கியம் குறிப்பிட்ட காலத்திற்கு தான் இருக்கிறது. அதன்பின் தாமாகவே மறைந்து விடும். அதன் பிறகு தகுதியான நபர் கிடைத்தவுடன் மறுபடியும் இயங்கத் தொடங்குகிறது. வருங்காலத்தை சொல்லும் தன்னுடைய திறமையின் காரணமாக பிரகாசிக்க ஆரம்பிக்கிறது. உதாரணமாக, நந்தி வாக்கியம், சப்தரிஷி வாக்கியம் முதலிய நாடிகள் தற்சமயம் வருங்காலத்தை உரைக்க முடிவதில்லை. (சென்னை ஓரியண்டல் மானுஸ்கிரிப்ட் லைப்ரரியில், வாசகர்களுக்கு இந்த நாடி சம்பந்தமான புத்தகங்கள் கிடைக்கலாம்).

ஸ்ரீ கண்ணன் மேலும் Dr. B.V. ராமன் முதலியவர்கள் நாடி சம்பந்தமாக, வரலாற்று சம்பந்தமான கேள்விகளுக்கு பதிலளிக்க தயங்குகிறார்கள். கண்ணன்,

Dr. B.V.ராமனால் சொல்லப்பட்ட நாடியைத் தவிர மற்ற நாடிகளைப் பற்றியும் சொல்கிறார். அவையாவன, சுகதேவர் நாடி, நாரதர் நாடி, நவக்கிரஹ நாடி, மகரிஷி சித்தாந்த நாடி முதலியன. நவக்கிரஹ நாடியின் விசேஷ மென்னவென்றால் கிரஹங்கள், தங்களுடைய புண்ணிய பாவங்களை வர்ணிக்கின்றன. மகரிஷி நாடியில் 18 மகரிஷிகள் ஜாதகர்களின் வருங் காலத்தைப் பற்றி விவாதிக் கின்றனர், மேலும் சம்பவங் களைக் குறித்து விளக்க மளிக்கின்றன.

ஸ்ரீ கண்ணனின் கூற்றுப் படி அவர் தன் 15வது வயதிலிருந்து நாடி கிரந்தங்களை படித்து வருகிறார். அதன் பிறகு ராகு புத்தியில் அவருக்கு திருமணம் நடந்தது. சுகர் நாடியில் இது கேது புத்தி என்று சொல்லப்பட்டது. அதற்குப் பிறகு அவருக்கு ஒரு விதமான உபாதைகள் ஏற்பட்டன. சுகர் நாடியில் இது ஏன் சொல்லப்படவில்லை என்பது குறித்த விவரம் மிகவும் ருசிகரமானது. நாடி சாஸ்திரி களுடன் நட்பு கொள்வது அவர்களுக்கு வீடு மற்றும் பல வசதிகள் செய்து கொடுப்பது வாடிக்கைக்காரர்களை சேர்ப்பது அதன் பிறகு நாடி சாஸ்திரம் பற்றி தெரிந்து கொண்டார். நிலையங்களில் சொல்லப்பட்ட எந்த விதமான பயனும் ஸ்ரீகண்ணன் அடைய வில்லை. எல்லா பணமும் நாடி பார்ப்பதில் செலவழித்து விட்டு குடும்பம் எப்படி செய்வது? அதுவரை நாடி சோதிடம் பற்றி அறிவதில் ஈடுபட்டிருந்ததாக தெரிகிறது.

மேலும் சென்னை மற்றும் பல இடங்களில் சைக்கிள் கடைகள் மற்றும் நாவிதர்களின் கடைகள் குறைவாகவும் நாடி நிலையங்கள் அதிகமிருந் திருக்கலாம்.

ஆசிரியரும் இந்த விஷயத்தில் மிகவும் பிரயாசைப்பட்டிருக்கிறார். கண்ணன் மேலும் மற்ற நாடி நிலையங்களைத் தவிர, மேலும் சில நாடி இலக்கியங்களை ஆசிரியர் பார்த்திருக்கிறார். அவையாவன, இரட்டை நாடி, வசிஷ்ட நாடி, காகபுஜண்டர் நாடி, சுகர் நாடி, மார்க்கண்டேயர் நாடி முதலியன.

★


With Best Compliments From

**INVESTERS' CLUB**

*For realistic and objective consultency in Share Market Real Estates and Ohter Investment related fields.*

Contact
Santosh P. Oak
12-B, Divyakunj Society
1076 Gokhale Road
Pune - 411 016
Tele : 353167
Fax : 0212 - 354014

With Best Compliments From

**SATPUTE AND ASSOCIATES**

*For Plots, Flats, Farm houses and other Real Estates in and around Pune*

Contact
Satpute and Associates
Promoters and Builders
759/34, Bhandarkar Institute Road,
Decan Gymkhana
Pune - 411004
Tele : 0212 - 330488

With Best Compliments From

Revolutionary Historian

**Sathya Ithihas Drashta, MANAV RATNA,**

Thiru. **Purushottham Nagesh Oak** M.A., LL.B.

| List of Publications | Rs. |
|---|---|
| a) **World Vedic Heritage** (1350 Pagea, 150 Pictures) | 400/- |
| b) **The Taj Mahal is a Temple** (Palace Delux Edn. 360 Pages, 86 Photos) | 250/- |
| c) **The Taj Mahal is Tejomahalaya A Shiva Temple** ( 120 points of evidence) | 10/- |
| d) **Agra Fort is a Hindu Building** | 50/- |
| e) **Some missing chapters of World history** | 80/- |
| f) **Great Britain was Hindu Land** | 10/- |
| g) **Fowler's Howlers** | 125/- |
| h) **Christianity is Chrishnanity** | 80/- |
| i) **Some blunders of Historical (P.B.)** | 150/- |
| **Research Delux Edn.** | 250/- |
| j) **Rationale of Astrology** Some books are also available in Hindi and Marathi | 100/- |

Contact :
**Institute for Rewriting Indian History**
Plot No. 10, Good will Society Aundh
Pune - 411 007 (India) Tele : 338449



## தமிழ் மாதங்களும் ராசிகளும்

| எண் | மாதம் | ராசி | எண் | மாதம் | ராசி |
|---|---|---|---|---|---|
| 1. | சித்திரை | மேஷம் | 7. | ஐப்பசி | துலாம் |
| 2. | வைகாசி | ரிஷபம் | 8. | கார்த்திகை | விருச்சிகம் |
| 3. | ஆனி | மிதுனம் | 9. | மார்கழி | தனுசு |
| 4. | ஆடி | கடகம் | 10. | தை | மகரம் |
| 5. | ஆவணி | சிம்மம் | 11. | மாசி | கும்பம் |
| 6. | புரட்டாசி | கன்னி | 12. | பங்குனி | மீனம் |

## திதிகளின் பெயர்கள்

| எண் | திதிகள் | எண் | திதிகள் |
|---|---|---|---|
| 1. | ப்ரதமை | 9. | நவமி |
| 2. | த்விதியை | 10. | தசமி |
| 3. | த்ருதியை | 11. | ஏகாதசி |
| 4. | சதுர்த்தி | 12. | த்வாதசி |
| 5. | பஞ்சமி | 13. | த்ரயோதசி |
| 6. | சஷ்டி | 14. | சதுர்தசி |
| 7. | சப்தமி | 15. | பௌர்ணமி |
| 8. | அஷ்டமி | | அமாவாசை |

## நவகிரகங்களும் கிழமைகளும்

| நவகிரகங்கள் | கிழமைகள் |
|---|---|
| சூரியன் | ஞாயிறு |
| சந்திரன் | திங்கள் |
| செவ்வாய் | செவ்வாய் |
| புதன் | புதன் |
| வியாழன் | வியாழன் |
| வெள்ளி | வெள்ளி |
| சனி | சனி |
| ராகு | – |
| கேது | – |

## நட்சத்திரங்களின் பெயர்கள்

| எண் | நட்சத்திரம் | எண் | நட்சத்திரம் | எண் | நட்சத்திரம் |
|---|---|---|---|---|---|
| 1. | அசுவனி | 10. | மகம் | 19. | மூலம் |
| 2. | பரணி | 11. | பூரம் | 20. | பூராடம் |
| 3. | கார்த்திகை | 12. | உத்திரம் | 21. | உத்திராடம் |
| 4. | ரோகிணி | 13. | அஸ்தம் | 22. | திருவோணம் |
| 5. | மிருகசீர்ஷம் | 14. | சித்திரை | 23. | அவிட்டம் |
| 6. | திருவாதிரை | 15. | சுவாதி | 24. | சதயம் |
| 7. | புனர் பூசம் | 16. | விசாகம் | 25. | பூரட்டாதி |
| 8. | பூசம் | 17. | அனுஷம் | 26. | உத்ரட்டாதி |
| 9. | ஆயில்யம் | 18. | கேட்டை | 27. | ரேவதி |

## தமிழ் வருடங்களின் பெயர்கள் - 60

| | | | | | |
|---|---|---|---|---|---|
| யுவ { 1935-36, 1995-96 | பார்த்திப 45-46 | மன்மத 55-56 | விசுவாவசு 65-66 | இராக்ஷஸ 75-76 | குரோதன 85-86 |
| தாது 36-37 | விய 46-47 | துன்முகி 56-57 | பராபவ 66-67 | நள 76-77 | அக்ஷய 86-87 |
| ஈஸ்வர 37-38 | சர்வசித்து 47-48 | ஹேவிளம்பி 57-58 | பிலவங்க 67-68 | பிங்கள 77-78 | பிரபவ 87-88 |
| வெகுதான்ய 38-39 | சர்வதாரி 48-49 | விளம்பி 58-59 | கீலக 68-69 | காளயுத்தி 78-79 | விபவ 88-89 |
| பிரமாதி 39-40 | விரோதி 49-50 | விகாரி 59-60 | சௌமிய 69-70 | சித்தார்த்தி 79-80 | சுக்கில 89-90 |
| விக்ரம 40-41 | விக்ருதி 50-51 | சார்வரி 60-61 | சாதாரண 70-71 | ரௌத்திரி 80-81 | பிரமோதூத 90-91 |
| விஷு 41-42 | கர 51-52 | பிலவ 61-62 | விரோதிகிருது 71-72 | துன்மதி 81-82 | பிரஜோற்பத்தி 91-92 |
| சித்திரபானு 42-43 | நந்தன 52-53 | சுபகிருது 62-63 | பரிதாபி 72-73 | துந்துபி 82-83 | ஆங்கீரஸ 92-93 |
| சுபானு 43-44 | விஜய 53-54 | சோபகிருது 63-64 | பிரமாதீச 73-74 | ருத்ரோத்காரி 83-84 | ஸ்ரீமுக 93-94 |
| தாரண 44-45 | ஜய 54-55 | குரோதி 64-65 | ஆனந்த 74-75 | ரக்தாக்ஷி 84-85 | பவ 94-95 |

# நாடி சோதிட இலக்கிய வரலாறு

இதுவரை வாசகர்கள் இந்திரியங்களுக்கு அப்பாற்பட்ட காட்சிகள் மகரிஷிகளுக்கும் யோகிகளுக்கும் எவ்வாறு சாத்தியம், நாடி சோதிடம் எவ்வாறு தோன்றியிருக்கக் கூடும் என்று என்னுடைய எண்ணங்களைப் படித்தீர்கள்.

இப்போது நாடி சோதிடர்களும் மற்ற அறிஞர்களும் என்ன சொல்கிறார்கள் என்பதைப் பார்ப்போம். பம்பாய், காலஞ்சென்ற பாபுபாய் சாயா சோதிட சாஸ்திரி அவர்களின் கருத்தைப் பார்க்கலாம். நாடி இலக்கிய சம்பந்தமான விபரங்கள், நாடி சம்ஹிதை கட்டிலிருந்து தெரியவருகிறது. அவருடைய கூற்று உண்மையானால், இவ்விதம் கருத இடம் உண்டு. இலட்சக்கணக்கான, கோடிக்கணக்கான வருடங்களுக்கு முன்னால் இமாலயத்தின் சில பகுதிக்ளில் அக்காலத்தில் முக்காலத்தையும் முற்றும் உணர்ந்த யோகிகள் கூடி இருந்தனர். அவர்களால் பல வருடங்களுக்கு பின்னால் தோன்றக் கூடிய மனிதர்களைப் பற்றிய வருங் காலம் அறியப்பட்டது. அவர்களுக்குள் விவாதித்து ஒரு முடிவிற்கு வந்தனர். அந்த சம்பாஷணைகளை தென்னிந்தியர்கள் எழுத்து வடிவத்தில் அமைத்தனர். அவர்களுக்கு பனை ஓலையில் வருங்காலத்தைப் பற்றி எழுதும் கலை கைவரப் பெற்றது. இம்மாதிரியான யோகி களின் கூட்டங்கள் வெகுகாலம் வரை நடந்து வந்தது. அந்தக் கூட்டத்தில் நிர்ணயிக்கப்பட்ட இலக்கியம் விரிவாகியது. தென்னிந்தியா விலிருந்து வந்த எழுத்தர்கள் திரும்புங்கால் போக்குவரவு சாதனங்களின்மையாலும், இயற்கையின் உத்பாதங்களாலும் அநேக கையெழுத்து பிரதிகளை இழந்தனர். இரண்டு மூன்று தலை முறைக்கு பின் இந்த இலக்கியம் க்ஷீனமடைவதுக் கண்டு, ப்ருகு, சாதுர், மைத்ரேயர், வசிஷ்டர், பிரம்மா, கிருஷ்ணர், பிரஹ்லாதர் முதலிய முனிவர்கள் வேறு வேறு சமயங்களில், வேறு வேறு இடங்களில் சேர்ந்து மறுபடியும் இந்த இலக்கியத்திற்கு உயிரூட்டி னார்கள். இந்த காரியத்தை அவர்கள் தூர்யபட்டரிடம் ஒப்பு வித்தனர். இதைத்தான் தூர்ய சம்ஹிதை என்று குறிப்பிடுகிறார்கள். பின்னால் இது 9 பிரிவுகளாயிற்று. அதன் பிறகு மூன்று உப பிரிவுகள் ஏற்பட்டன. இவையெல்லாம் காலப்போக்கில் நசிந்து, தற்சமயம் இந்த இருபதாம் நூற்றாண்டில் தூர்ய சம்ஹிதையும், ப்ருகு சம்ஹிதை மட்டும் தற்சமயம் கிடைக்கிறது.

மேலே குறிப்பிட்ட வர்ணணை விளக்கமாக இல்லை. யோகிகள் எப்போது எங்கு ஒன்று கூடினர், எந்த ரிஷிகள், மகரிஷிகள் ஒரு ஜாதகனின் பிறந்த தேதி, வாரம், மாதம், வருடம், பெயர், மேலும் பிறந்த தேதி மட்டும் சரியாகச் சொல்லத் தெரிந்த இவர்கள் இந்த இலக்கியத்தை எழுதிய, காப்பாற்றியவர்களைப் பற்றி குறிப்பிடாதது ஏன்? இலட்சக்கணக்கான வருடங்களுக்கு முன்னால் என்று சொன்னால் மட்டும் போதுமா? தென்னிந்தியர் களால் கொண்டு வரப்பட்ட இந்த கையெழுத்து பிரதிகள் இன்றும் தமிழ், தெலுங்கு, மலையாளத்தில் மட்டும் கிடைக்கும் போது, பிருகு மற்றும் இதர ரிஷிகளின் சம்ஹிதைகள் மட்டும் வட இந்தியாவில் புத்தக வடிவில் பிரபல மாயிருக்கக் காரணமென்ன? இந்த கேள்விகளுக்கு விடை காண முடியவில்லை.

டாக்டர் R. நாகராஜ சர்மா என்பவரிடம் சப்தரிஷி நாடி இருக்கிறது. இவர் நாடி சம்பந்தமாக பல கட்டுரைகள் எழுதியுள்ளார். இது சாதாரண ஜனங்களுக்கு பிடிபடாமல் இருக்கிறது. இவர் கூறுவ தாவது:- "நாடி சோதிடத்தின் ஆரம்பம் பராசரர் பார்வதியின் சம்பாஷணையிலிருந்து ஆரம்ப மாகிறது. மகாசிவ வாக்கியம் மேலும் மற்ற புராணக் கதைகளில் சிவன் பார்வதி மூலமாக கேட்கப்படும். ஆழ்ந்த கேள்விகளுக்கு பதில் கொடுத்து அறிவூட்டுகிறார். அப்போது அங்கிருந்த முனிவர்கள் இதைக் கேட்டு பயனடைந்தனர். சப்தரிஷி நாடியில் சிவனார்க்கு பதில் பராசர முனிவர் பார்வதி தேவிக்கு பல ஜாதகர்களின் பலன்களை பார்வதி அன்னையிடம் சொல்லி மாதாவை மகிழ்விப்பதாக கூறப்படுகிறது. அத்ரி மற்ற முனிவர்களும் இதில் பங்கு பெறுகிறார்கள். விசுவாமித்திரர் மற்றும் வசிஷ்டரிடையே யிருந்த போட்டி எல்லோரும் அறிந்ததே? இங்கும் அவர்களுடைய அனுபவங்கள் அவர்களிடையே நடந்த சம்பாஷனைகளின் மூலம் அறியப்படுகிறது.

ஸ்ரீ நாகராக சர்மாவின் நாடி இலக்கியசம்பந்தமான இந்த சம்பாஷனை மூலம் பரம சிவனின் அருள் பெறு வதற்காக, பார்வதி அன்னை முனிவர்களின் ஒரு கூட்டத்தை கூட்டி யிருக்கலாம். அதன் தலைமை பார்வதி தேவி ஏற்றிருக்கக் கூடும். பூர்வ ஜன்மத்தில் செய்யப்பட்ட காரியங்களை அனுசரித்து, மனிதர்கள் வாழ்க்கை நடத்த வேண்டி யிருக்கிறது. அதன் பொருட்டு, அவர்கள் வருங்காலத்தில் நிகழக்கூடிய விபத்துகளை சமாளிப்பது எப்படி? அதைப் போக்குவதற்காக பக்தி சிரத்தையுடன் என்னென்ன காரியங்கள் செய்யலாம். மனிதர்களின் உபாதைகளைப் போக்குவதுடன் கூட, மகான்களின் அறிவை எப்படி பயன்படுத்தலாம் முதலிய யோசனைகள் நாடி இலக்கியத்துடன் பின்னப்பட்டி ருக்கின்றன.

நாகராஜ சர்மாவின் இந்த கூற்றும் விளக்கமாகவில்லை. புராணக் கதை போன்று இருக்கிறது. ஆனால் லட்சியம் விவாதிக்கக் கூடியதே. இதே நாகராஜ சர்மாவின் நாடி இலக்கிய சம்பந்தமான மகரிஷிகள் சம்பந்தமான மற்றொரு கூற்றைக் கண்டு வாசகர்கள்மேலும் ஆச்சரியப் படக்கூடும். நாடி இலக்கிய கர்த்தாக்களுக்கு, ESP ( Extra sensory perception) புலன்களுக்கு அப்பாற்பட்ட மனோசக்தி நாடி இலக்கியம் இயற்றும் போது இல்லாமலிருந்திருக்கக் கூடும். அவர் கருதுவதாவது அந்த சமயம் வழக்கிலிருந்த சோதிட அறிவின்படி, நட்சத்திரங் களின் நிலைக்கு ஏறப பல்லாயிரக்கணக்கான ஜாதகர் களின் ஜாதகங்கள் கணிக்கப் பட்டிருக்கலாம். இந்த கூற்று விஞ்ஞான முறைப்படியும், மூட நம்பிக்கைகளைத் தகர்க்க முற்படும் அறிவு ஜீவிகளுக்கு பொருந்தலாம். ஆனால் நாடி இலக்கியத்தில் ஒரு நபரின் பெயர், பிறந்த இடம் கூட

எவ்வாறு நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது என்பதை அறியும் போது இந்த கூற்று எவ்வாறு பொருந்தும். கேவலம் ஒரு கட்டை விரல் ரேகையை மட்டும் வைத்துக் கொண்டு ஒரு ஜாதகனின் பெயர், ஊர் முதலியன சொல்லக்கூடிய எந்த ஒரு சோதிடனும், அவன் மரத்தடி ஜோசியனா யிருந்தாலும்,பத்திரிகை ஜோசியனாயிருந்தாலும் சரி, தொலைகாட்சி ஜோதிடனா யிருந்தாலும் சரி, அவனால் முடியுமா? அது இந்த ஆச்சரியகரமான கணிப்பு நாடி சோதிடன் ஒருவனால் தான் முடியும், உண்மை என்னவென்றால், இந்த ஆச்சரியகரமான முறை தான், நாடி சோதிடம்பால் இந்த ஆசிரியருக்கு ஒரு ஈர்ப்பு ஏற்பட காரணமா யிருந்தது. சாதாரணமாக இந்த ஆசிரியர் பத்திரிகைகளிலோ, தினத்தாள்களிலோ, மாதப் பத்திரிகைகளில் வரும் சோதிடம் குறித்து கண்ணெடுத்தும் பார்க்கும் வழக்கமில்லை.

டாக்டர் நாகராஜ சர்மாவின் சப்தரிஷி நாடியில் ஜாதகரின் பெயர் முதலியன அறிய முடியாமலிருக்கலாம். ஜென்ம நட்சத்திரம் மேலும் கிரகங்களின் நிலையின்படி ஒவ்வொரு ஜாதகரின் வாழ்க்கை எப்போது முடியும் என்பது கூட கணிக்கப் படலாம். ஒரு இடத்தில் சப்தரிஷி நாடியில் வர்ணிக்கப்பட்ட சில ஆருடங்கள் மிகவும் கடினமான மொழியில் இருக்கின்றன. அகஸ்தியர், வசிஷ்டர், சுகர், ப்ருகு, தூய நாடியில் ஜாதகனின் பெயர் எப்படி தெரிய வருகிறது என்பதற்கு திரு.நாகராஜ சர்மா மௌனம் சாதிக்கிறார்.

சாதாரணமாக இந்த முறையில் சில சம்ஹிதைகள் இந்தி, மராத்தி மேலும் இதர பாஷைகளில் புத்தக வடிவில் காணப்படுகின்றன. ஒவ்வொன்றும் அதில் சொல்லப்பட்டிருப்பவை உண்மை என்று சொல்கின்றன. அந்த புத்தகங்களின் ஆரம்பத்தில் பல பக்கங்களில் பல வேறு வருடங்களில் பிறந்த ஜாதகர்களின் ஜாதகங்கள் நிரம்பியுள்ளதாக காணப்படு கின்றன. அவைகளுக்கு எண் கொடுக்கப்படுகிறது. தங்கள் தங்களுடைய ஜாதகத்துடன் அவற்றை இணைத்து, கொடுக்கப்பட்டுள்ள எண் படி அதன் எதிரே கொடுக்கப் பட்டுள்ள பலன்களை பார்த்துக் கொள்ள வேண்டும். புத்தகத்தில் எந்த ஒரு ஜாதகரின் தாய் தந்தையர் பெயர், மனைவியின் பெயர், பிறந்த தேதி, மாதம், வருடம் முதலியன கொடுக்கப்பட வில்லை. இரண்டு நிமிடங்களில் படிக்கத்தகுந்த வாறு ஒரே பக்கத்தில் முடிந்து விடுகின்றது. அதில் குறிப்பிடப்பட்டுள்ள சில சம்பவங்கள், நடந்ததும், நடக்கப் போவதும் ஓரளவுதான் சரியாக இருக்கின்றன.

பங்களூரில் பிரகாசிக்கப்படும் Astrological Magazine-ன் சோதிடக் கலை வல்லுனரும் ஆசிரியருமான DR. B.V. ராமன் 1970 Sep, Oct-ல் இந்து சோதிட சாஸ்திரம் பற்றி பேசுவதற்கு லண்டனுக்கு அழைக்கப் பெற்றார். ஒரு சொற்பொழிவில் அவர் நாடி சோதிட சாஸ்திரம் பற்றியும் பேசியுள்ளார். அவை சோதிட சாஸ்திரத்தில் தலை சிறந்த வித்வானாயிருந்த காரணத்தினால், அவருடைய பேச்சு முழுவதும் நாடி சோதிடத்தில் வர்ணிக்கப்பட்ட விஷயத்தைக் குறித்தும், அது எவ்வாறு மற்ற சோதிடத்துடன் பொருந்துகிறது என்பதைப் பற்றியதாயிருந்தது. நாடி சோதிடம் சித்தர்களால் எழுதப்பட் காரணத்தினால் அது மேலும் சிறப்பு வாய்ந்ததும் தெய்வீக சக்தியினால் இயற்றப் பட்டதாகும், என்று அவர் மேலும் சொன்னார். அவர் மேலும் சொல்வதாவது கடந்த 20 வருடங்களாக நான் நாடி சோதிடத்தைப் பயின்று வருகிறேன். 1972ல் நான் ஒரு புத்தகம் எழுதப் போகிறேன். (ஆனால் இன்று வரை என்ன புத்தகம் அவரெழுதினார், அதன் பெயர் என்ன என்று இதுவரை தெரியவில்லை). இந்த நாடி சாஸ்திரம் நம்முடைய ஹிந்து கலாசாரத்தை பிரதிபலிக்கும் சிறந்த சாகித்யமாகும்.

ஐரோப்பாவில் இவ்விதம் கருதப்படுகிறது. அலெக்ஸாண்டிரியா (எகிப்து தேசத்தில்) இருக்கும் புராதன புத்த காலயத்தில் தீப்பிடித்ததற்கு பிறகு, அந்த சமயத்திலிருந்த அநேக சாஸ்திரங்களின் அறிவுக் களஞ்சியம் எரிந்து சாம்பலாகிவிட்டது. தற்போதுள்ள மனிதன் அந்த சாஸ்திரங்களினால் ஏற்படக்கூடிய அறிவை நிரந்தரமாக இழந்து விட்டான். ஆனாலும் நான் மிக்க பெருமையுடன் சொல்ல ஆசைப்படுவது என்னவென்றால் இம்மாதிரி அநேக சாத்திரங்களின் அறிவுக் களஞ்சியங்கள் இந்தியாவில் இப்போதும் முழுவதுமாக காப்பாற்றப் பட்டிருக்கிறது. அம்மாதிரியான ஒரு மனித குலத்திற்கு மிக்க பயன்படும் இந்த நாடி சாத்திரமாகும். இந்த இலக்கியத்தை மிக்க ஆழ்ந்து படித்தால் பராசரரும் மற்ற முனிவர்களால் சொல்லப்பட்ட யோக, கிரகபலன்கள், ஜாதகங்களை கணித்தல் முதலியவற்றில் ஏற்பட்ட எண்ணங்களினால் நாடி சோதிடர்கள் லாபம் அடைந்திருக்கலாம். மிக்க பெருமளவில் இயற்றப்பட்ட இந்த இலக்கியமானது, சுருக்கமாகவும், எழுத்து மூலமும் கொடுக்கப் பட்டிருப்பதன் காரணமாக, மிகவும் சுலபமாக்கப் பட்டிருக்கிறது.

எனது பாட்டனார் காலஞ்சென்ற தூய நாராயணராவ் 60 வருடத்திற்கு முன் (1910க்கு சமீபம்) ஒரு நாடி சோதிடம் பார்த்தார். அதற்கு பிறகு நான் புதன், சுக்கிரன், சரஸ்வதி, சத்ய, சந்திர நாடியைப் படித்தேன்.

ஸ்ரீ S. கண்ணன் 1968-69ல் அஸ்ட்ராலஜிகல் மாகஸீனில் (சோதிடப் பத்திரிகை) 10 கட்டுரைகளடங்கிய ஒரு தொகுப்பை எழுதியுள்ளார். (தற்சமயம் அவர் எங்கு உள்ளார் என்று தெரியவில்லை). அவர் ஒரு இடத்தில் சொல்வதாவது "1952ல் நான் கோபாலகிருஷ்ண ராவுடன் நாடி சாஸ்திரம் குறித்து விவாதித்துள்ளேன். ஸ்ரீ ராவ் மீனா(மீனாட்சி) நாடி இயற்றியவர்". அவர் சொன்னதாவது, புத நாடியில் இது விஷயமாக புத நாடி சோதிடர் ஸ்ரீனிவாசாரியார் இவ்விதம் சொல்கிறார், சில நாடி இலக்கியம் குறிப்பிட்ட காலத்திற்கு தான் இருக்கிறது. அதன்பின் தாமாகவே மறைந்து விடும். அதன் பிறகு தகுதியான நபர் கிடைத்தவுடன் மறுபடியும் இயங்கத் தொடங்குகிறது. வருங்காலத்தை சொல்லும் தன்னுடைய திறமையின் காரணமாக பிரகாசிக்க ஆரம்பிக்கிறது. உதாரணமாக, நந்தி வாக்கியம், சப்தரிஷி வாக்கியம் முதலிய நாடிகள் தற்சமயம் வருங்காலத்தை உரைக்க முடிவதில்லை. (சென்னை ஓரியண்டல் மானுஸ்கிரிப்ட் லைப்ரரியில், வாசகர்களுக்கு இந்த நாடி சம்பந்தமான புத்தகங்கள் கிடைக்கலாம்).

ஸ்ரீ கண்ணன் மேலும் Dr. B.V. ராமன் முதலியவர்கள் நாடி சம்பந்தமாக, வரலாற்று சம்பந்தமான கேள்விகளுக்கு பதிலளிக்க தயங்குகிறார்கள். கண்ணன்,

Dr. B.V.ராமனால் சொல்லப்பட்ட நாடியைத் தவிர மற்ற நாடிகளைப் பற்றியும் சொல்கிறார். அவையாவன, சுகதேவர் நாடி, நாரதர் நாடி, நவக்கிரஹ நாடி, மகரிஷி சித்தாந்த நாடி முதலியன. நவக்கிரஹ நாடியின் விசேஷ மென்னவென்றால் கிரஹங்கள், தங்களுடைய புண்ணிய பாவங்களை வர்ணிக்கின்றன. மகரிஷி நாடியில் 18 மகரிஷிகள் ஜாதகர்களின் வருங் காலத்தைப் பற்றி விவாதிக் கின்றனர், மேலும் சம்பவங் களைக் குறித்து விளக்க மளிக்கின்றன.

ஸ்ரீ கண்ணனின் கூற்றுப் படி அவர் தன் 15வது வயதிலிருந்து நாடி கிரந்தங்களை படித்து வருகிறார். அதன் பிறகு ராகு புத்தியில் அவருக்கு திருமணம் நடந்தது. சுகர் நாடியில் இது கேது புத்தி என்று சொல்லப்பட்டது. அதற்குப் பிறகு அவருக்கு ஒரு விதமான உபாதைகள் ஏற்பட்டன. சுகர் நாடியில் இது ஏன் சொல்லப்படவில்லை என்பது குறித்த விவரம் மிகவும் ருசிகரமானது. நாடி சாஸ்திரி களுடன் நட்பு கொள்வது அவர்களுக்கு வீடு மற்றும் பல வசதிகள் செய்து கொடுப்பது வாடிக்கைக்காரர்களை சேர்ப்பது அதன் பிறகு நாடி சாஸ்திரம் பற்றி தெரிந்து கொண்டார். நிலையங்களில் சொல்லப்பட்ட எந்த விதமான பயனும் ஸ்ரீகண்ணன் அடைய வில்லை. எல்லா பணமும் நாடி பார்ப்பதில் செலவழித்து விட்டு குடும்பம் எப்படி செய்வது? அதுவரை நாடி சோதிடம் பற்றி அறிவதில் ஈடுபட்டிருந்ததாக தெரிகிறது.

மேலும் சென்னை மற்றும் பல இடங்களில் சைக்கிள் கடைகள் மற்றும் நாவிதர்களின் கடைகள் குறைவாகவும் நாடி நிலையங்கள் அதிகமிருந் திருக்கலாம்.

ஆசிரியரும் இந்த விஷயத்தில் மிகவும் பிரயாசைப்பட்டிருக்கிறார். கண்ணன் மேலும் மற்ற நாடி நிலையங்களைத் தவிர, மேலும் சில நாடி இலக்கியங்களை ஆசிரியர் பார்த்திருக்கிறார். அவையாவன, இரட்டை நாடி, வசிஷ்ட நாடி, காகபுஜண்டர் நாடி, சுகர் நாடி, மார்க்கண்டேயர் நாடி முதலியன.

★

With Best Compliments From

**INVESTERS' CLUB**

*For realistic and objective consultency in Share Market Real Estates and Ohter Investment related fields.*

Contact
Santosh P. Oak
12-B, Divyakunj Society.
1076 Gokhale Road
Pune - 411 016
Tele : 353167
Fax : 0212 - 354014

With Best Compliments From

**SATPUTE AND ASSOCIATES**

*For Plots, Flats, Farm houses and other Real Estates in and around*

***Pune***

Contact
Satpute and Associates
Promoters and Builders
759/34, Bhandarkar Institute Road,
Decan Gymkhana
Pune - 411004
Tele : 0212 - 330488

With Best Compliments From

Revolutionary Historian

**Sathya Ithihas Drashta,**
**MANAV RATNA,**

Thiru. **Purushottham Nagesh Oak** M.A., LL.B.

| List of Publications | Rs. |
| --- | --- |
| a) **World Vedic Heritage** (1350 Pagea, 150 Pictures) | 400/- |
| b) **The Taj Mahal is a Temple** (Palace Delux Edn. 360 Pages, 86 Photos) | 250/- |
| c) **The Taj Mahal is Tejomahalaya A Shiva Temple** ( 120 points of evidence) | 10/- |
| d) **Agra Fort is a Hindu Building** | 50/- |
| e) **Some missing chapters of World history** | 80/- |
| f) **Great Britain was Hindu Land** | 10/- |
| g) **Fowler's Howlers** | 125/- |
| h) **Christianity is Chrishnanity** | 80/- |
| i) **Some blunders of Historical (P.B.)** | 150/- |
| **Research Delux Edn.** | 250/- |
| j) **Rationale of Astrology** | 100/- |

Some books are also available in Hindi and Marathi

Contact :
**Institute for Rewriting Indian History**
Plot No. 10, Good will Society Aundh
Pune - 411 007 (India) Tele : 338449



# நாடி சோதிடம் சம்பந்தமான இலக்கியத்தின் பரிமாணங்கள்

இப்பொழுது உலகத்தில் 300 கோடி மக்களுக்கு மேல் உயிருடன் இருப்பதாக கருதப் படுகிறது. அதைத் தவிர இன்று வரை ஆயிரம் வருடங்களுக்குள் எண்ணற்ற மனிதர்கள் பல தடவை பிறந்திருக்கலாம் அல்லது இறந்திருக்கக்கூடும். இவர்கள் எல்லோரையும் கணக்கிட்டு இந்த நாடி சோதிடம் எவ்வாறு உபயோகமாயிருந்துள்ளது? ஏதாவது ஒரு எல்லை இருக்க வேண்டுமல்லவா? சில சமயம் இந்த நாடி இலக்கிய புத்தகங்கள் பூராவும் படித்து முடித்திருக்க வேண்டும், மேலும் புதிய இலக்கியங்கள் தோன்றியிருக்க வேண்டும். இம்மாதிரி பல பிரமைகள் மனதில் தோன்றுகின்றன.

நாடி இலக்கியச் சுவடிகளின் எண்ணிக்கை எவ்வளவு என்று பல அறிஞர்கள் கணக்கிட்டிருக் கிறார்கள். Astrological Magazine ஆசிரியர் Dr. B.V. ராமன் அவர்களின் கூற்றுப்படி சரஸ்வதி மஹாலில் ஒரு கட்டு 50 சுவடிகள் என்ற எண்ணிக்கைக் கேற்றவாறு 50,000 ஜாதகர்களின் வருங் காலத்தைப் பற்றிய குறிப்புகள் இருந்தன. சத்ய் சம்ஹிதை யில் 125 கட்டில் 37,500 ஜாதகர்களின் வருங் காலத்தைப் பற்றிய கணிப்பு கிடைக்கப் பெற்றுள்ளது. "நாடி கிரந்தம்" என்ற மராத்தி புஸ்தகத்தில் நந்தி நாடி சோதிடர் தன்னிடம் 12 இலட்சம் சுவடிகள் இருந்ததாக குறிப்பிடுகிறார். அதே புத்தகத்தில் டில்லியில் உள்ள காலஞ் சென்ற பண்டிட் ஹவேலிராம் என்பவரிடம் அருண் நாடி சம்பந்தமாக 7 கோடி சுவடிகள் இருந்ததாக குறிப்பிட்டிருக்கிறார். பம்பாய் டவளே பிரசுர நிறுவனம் 'சுபோத் ப்ருகு ஸம்ஹிதா' என்கிற புத்தகத்தின் முன்னுரையில் சோதிடர் பிரபாகர் நாராயண் தஹிவலேகர் சில விளக்கங்கள் அளித்திருக்கிறார். அவர் சொல்வதாவது ஒவ்வொரு 100 வருடங்களில் சுமார் 2,56,800 ஜாதகங்கள் தயாரிக்கப்படுகின்றன. இம் மாதிரி எவ்வளவு நூற்றாண்டுகள் கடந்தன என்று சொல்வதற்கில்லை. இந்த எல்லா அறிஞர்களின் கூற்றிலிருந்து நாடி சோதிட இலக்கியச் சுவடிகளின் பரிமாணம் எவ்வளவு என்று வாசகர்களே ஊகிக்கலாம்.

இந்த ஆசிரியரும் இது சம்பந்தமாக தானும் சில ஆராய்ச்சிகள் செய்திருக்கிறார். சில வருடங்களுக்கு முன் தூர்ய சம்ஹிதை எழுதிய சாயா சாஸ்திரியின் குமாரர் ஹர்ஷத் பாயியுடன் விவாதிக்கும் போது அவர்களுடைய முன்னோர்கள் நாற்பது வண்டி பூராவுமாக கேரளத்திலிருந்து நாடி சோதிடச் சுவடிகளை கொணர்ந்ததாகச் சொன்னார். ஒரு வண்டியில் எவ்வளவு சுவடிகள் இருந்திருக்க வேண்டும் என்று என்னை ஊகித்துக் கொள்ளும்படி சொன்னார். நான் வாசகர் களிடம் அதை விட்டு விடு கிறேன். சென்னையில் உள்ள சுகர் நாடி கேந்திர செயலர் கருணாகரன் இது விஷயம் குறித்து சொன்னதாவது, அவரிடம் 1000/1200 கட்டுகள் உள்ளன. ஒவ்வொரு கட்டிலும் 50 (அ) 60 ஆயிரம் பனை ஓலைச் சுவடிகள் உள்ளன என்று சொன்னார். இது பல இடங்களுக்கு போய்ச் சேர்ந்ததன் காரணமாக தன்னிடம் கைவசம் குறைவாக உள்ளது என்று சொன்னார். மற்றும் சில நாடி கேந்திரங்களில் விசாரித்த போதும், யார் நாடி வருகிறார்களோ அவர்களின் சுவடிகள் மட்டும் தான் எங்களிடம் இருக்கும் என்று சொல்லி, குறைவாக இருக்கும் காரணமென்ன என்று சொல்வதை தவிர்க்கிறார்கள்.

தன்னிடம் உள்ள பனை ஓலைச் சுவடிகளின் எண்ணிக்கையைக் கண்டு, இந்த நாடி சோதிடத்தை நம்ப மாட்டார்கள் என்று கருதி நாடி சோதிடர்கள் இவ்வாறு சொல்லலாம். யாதொரு நாடி சோதிடரும் அறுதியிட்டு தன்னிடம் எவ்வளவு சுவடிகள் உள்ளன என்பதைச் சொல்வதில்லை. 

நாடி சோதிடம் எழுதப்பட்டுள்ள பனை ஓலைகளின் சில கட்டுக்கள்



With Best Compliments From

PRINC. ADWAYANAND GALTAGE
BHOJ (BELGAUM),
KARNATAKA - 591 263.

With Best Compliments From

**Thiru. S.R. Thampi**
Madras

With best Compliments from







**ALAGAR AGENCIES**
SANATHI STREET
THOTHONIMALAI
KARUR

With all divine blessings

**NARBAVEE**











**A WELL WISHER**
**SHANKARJI**



With Best Complements From







**TRANSCLEAN ELECTRICALS**
52, Arul Nagar,
Madhavaram Milk Colony,
Madras - 600 051

A Grade Electrical Contractors

With Best Complements From







**SHREE VENKATESWARA ENGINEERING WORKS**
128, Kodambakkam High Road,
Nungambakkam
Madras - 600 034

General Engineering Fabricators

# பல்வேறு நாடி சோதிட நிலைய அனுபவங்கள்

இதுவரை பல நாடி சோதிட நிலையங்களுக்கு செல்லும் வாய்ப்பேற்பட்டது. அங்குள்ள நிலைமை, நாடி சோதிடர்கள் மேலும் அங்குள்ள ஜனங்கள் சிலர் பேசிக் கொண்டதை இங்கு சுருக்கமாக விவரிக்கிறோம்.

### அகஸ்தியர் நாடி நிலையம் தாம்பரம்

முதலில் என்னுடைய பிறகு மனைவியுடைய மேலும் மக்களின், மற்றும் பக்கத்திலுள்ளவர்கள், நண்பர்கள் முதலியவர்களின் சோதிடம் பார்ப்பதற்கு பல தடவை சென்றிருக்கிறேன். அங்குள்ளவர்களோடு நன்றாக பழகியதின் காரணமாக அவர்களை பெயர் சொல்லி அழைக்கும் அளவிற்கு பழக்கம் ஏற்பட்டுள்ளது.

மொழிப் பிரச்னை. அவர்கள் எல்லோரும் என்னுடன் பேச விரும்பினாலும், வேறு வழியில்லை. எனக்குத் தமிழ் தெரியாது. நானும் கற்றுக் கொள்ள முயற்சிக்கவில்லை. சில எழுத்துக்கள் மட்டும் தெரியும்.

அங்குள்ள நாடி சோதிடர்களில் ஸ்ரீ சிவஷண்முகம் மிக்க அறிவாளியாகத் திகழ்கிறார். ஸ்ரீ ராஜேந்திரன் Engineering Diploma பெற்றிருந்தும், குலத் தொழிலை விடாமல் நாடி சோதிடராகவும் இருக்கிறார். ஆகையால் ஆங்கிலமும் பேசவும் எழுதத் தெரிந்திருக்கிறது. ஆங்கில மொழியில் புலமை என்று சொல்ல முடியாவிட்டாலும் அவர் பேசுவது புரியும்படி இருக்கிறது. தற்சமயம் ராஜேந்திரன் பல்லாவரத்திலுள்ள வசிஷ்ட நாடியில் வேலை செய்கிறார்.

இந்த நிலையத்தில், ஆங்கிலம் மேலும் இந்தி மொழியில் மொழி பெயர்க்க ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. இப்பொழுது அருணும் அரவிந்தும் இந்தி மொழி பெயர்ப்பில் ஈடுபட்டிருக்கின்றனர். ஸ்ரீ குருஞ்சி, சேகரன் முதலிய புது நாடி சோதிடர்களும் தங்கள் திறமையைக் காட்டுவதில் முனைந் திருக்கின்றனர். மனோகரன் தனியாக போனில் ஆங்கிலத்தில் பார்வை நேரம் வரவேற்பு முதலியவைகளைக் கவனித்துக் கொள்கிறார். அவருடைய இனிய சுபாவத்தால் எல்லோரையும் கவருகிறார். ஸ்ரீ சிவ ஷண்முகத்திடம் ஜப்பான் முதலிய நாட்டைச் சேர்ந்தவர்களின் கும்பல் இருக்கிறது. ஸ்ரீ துரை சுப்பு ரத்தினம் அன்புடன் பழகுகிறார். அவருக்கு திருமணமாகிவிட்டது. சிறுவயதிலேயே நாடி சோதிடம் சொல்கிறார். ஆங்கிலத்தில் சிறிது சரளமாக பேச முடியாததால் சிறிது வெட்கப்படுகிறார். ஆனால் தனியாகவே கௌசிக நாடியை படிக்கிறார். ஸ்ரீ மீனாட்சி சுந்தரம் மிகவும் புத்திமான் மேலும் உழைப்பாளி. தமிழில் பழமையான எழுத்தில் உள்ளதை எளிய தமிழில் ஒலிநாடாவில் பதியவைக்கும் கடினமான வேலையைச் செய்துவருகிறார். ஒரு போலீஸ் அதிகாரியிடமிருந்து வெகுமானமாகக் கொடுக்கப்பட்ட ஒரு பேனா செட்டை பெருமையுடன் எடுத்துக் காட்டுகிறார். என்னுடன் பேச முயலுவார். ஒரு நாள் என்ன மிஸ்டர் சுந்தரம் என்று கேட்டவுடன் ¼ மணி நேரம் தமிழில் பேசினார். என்னுடன் பேசுவதில் அவருக்கு மிகவும் விருப்பம் இருப்பதாகப் புலப்பட்டது. இன்னொரு சோதிடர் நாதன். ஆங்கிலம் கொஞ்சம் கொஞ்சம். ராஜேந்திரனை நடுவில் வைத்துக் கொண்டு என்னுடன் பேச முயலுகையில் ஒரு தடவை என்னிடம் சொன்னார், "நான் தங்களுடன் நிறைய பேசவேண்டும்" நான் "தயக்க மன்னியில் பேசிக்கொண் டேயிருங்கள், எனக்குத் தமிழ் தெரியாவிட்டாலும் புரிந்து கொள்வேன்". அவருக்கு எனக்கு சோதிடம் சொல்ல மிக்க ஆவல். ஏனென்றால் இவர் தான் முதலில்என்னை ஒரு மாதம் கழித்து வா என்று சொன்னவர், பின்னர் சிவஷண்முகம் தான் எனக்கு சோதிடம் சொன்னார். ஒரு தடவை நான் ஒரு பெரிய அதிகாரியின் ஜாதகத்தைப் பார்க்கச் சென்ற போது நாதனை விட்டு சோதிடம் பார்க்கலாம் என்று தோன்றியது. அவருடைய ஓலை கிடைத்தது. சோதிடம் சொல்லி முடித்தவுடன் நாதன் எனக்கு நன்றி சொன்னார். உண்மையில் நான்தான் அவருக்கு நன்றி செலுத்த வேண்டும்.

### அகஸ்தியர் நாடி நிலையம், காஞ்சிபுரம்.

காஞ்சி புரத்திலுள்ள ஸ்ரீ D. பால் சுப்ரமணியன் விருந் தோம்பல் கூடிய நல்ல வித்வான். ஆங்கில அறிவு சிறிதாயிருந்த போதிலும், பிற நாட்டவர்களுடன் மிக்க சரளமாக பழகி அவர்களுடைய சந்தேகங்களைப் போக்குகிறார். நான் அவரை 2,3 தடவை தான் சந்தித்தேன். ஆனால் ஒவ்வொரு தடவையும் மிகவும் உற்சாகத்துடன் வரவேற்பார். என்னுடைய மராத்தி புத்தகத்தில் உள்ள கருத்துக்களால் மிகவும் கவரப்பட்டார். அவர் நாடி சோதிட இலக்கிய கர்த்தாக்களான முனிவர்களின் ஆசியால் தான் இவ்விதம் நடக்கிறது என்று சொல்வார். ஆங்கிலம், இந்தி, தமிழ் முதலிய எல்லா பாஷைகளிலும் நாடி சம்பந்தமான புத்தகங்கள் எழுதுவதற்கு எனக்கு உற்சாக மளித்திருக்கிறார். அவருடைய நாடி சோதிட நிலையத்தில் மிக்க கும்பல் இருக்கிறது.

### அகஸ்தியர் நாடி நிலையம், பங்களூர்.

பெங்களூரில் இருக்கும் நிலைய நிர்வாகி திரு.மணிவாசகம் தன்னுடைய மனைவியுடைய உதவியுடன் நடத்தி வருகிறார். இங்கு தாம்பரம், காஞ்சிபுரம் போன்று கூட்டம் இல்லை. இங்கு தெலுங்கு, கன்னடம், ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்புக்கு ஏற்பாடுகள் இருக்கின்றன. வீட்டிலேயே, நிலையமிருப்பதால் வீடு போன்ற சூழ்நிலை இருக்கிறது. பிடித்தமாக இருக்கிறது.

### ஸ்ரீ வசிஷ்ட நாடி பல்லாவரம்.

இந்த நிலையம் ஆரம்பித்து சிறிது நாளே ஆன போதிலும், இங்கு திரு.ராஜேந்திரன் நாடி சோதிடம் சொல்வதால் நான் அடிக்கடி இங்கு

சென்றிருக்கிறேன். இங்குள்ள நிர்வாகி அரவிந்தசாமி இளைஞர். ஆனால் மிக்க சாமர்த்தியமும், சோதிடம் சொல்வதில வல்லவராகவும் இருக்கிறார். இவருடைய நிலையத்தில் நான் பிரசன காண்டம் மூலம் என்னுடைய வருங்காலம், செய்யும் பாவம், இந்தியாவின் வருங்காலம் குறித்து மிக்க ஆச்சரியமான தகவல்களை அறிந்துள்ளேன். (இதை பின்னால் விவரிக்கிறேன்) மிக்க கட்டுப்பாடுடன் நடக்கும் இந்த நிலையத்தில் திரு.ராஜேந்திரன போன்ற அறிவாளி, அடக்கமான, அனுபவஸ்தர்கள் சோதிடம் கூறுவதால், இந்த நிலையம் எல்லோராலும் விரும்பப்படுகிறது. வசிஷ்ட நாடியும் ஒரு சிறந்த முறை. இங்கு மகாசிவ நாடி மூலம் கௌசிக நாடி மூலமும் ஆருடம சொல்லப்படுகிறது. இந்தியிலும், ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கும் திறமை படைதத திரு. விசுவநாத சாஸ்திரி சில சமயம் ஜப்பானியர்களை அழைத்து வருகிறார். சர்மாவின் கட்டணம் அதிகம் ஆனாலும் மொழிபெயர்ப்பு நன்றாக உள்ளது.

'Please Wait' இந்த இரண்டு வார்த்தைகள் இந்த நாடி நிலையத்திலுள்ள எல்லோரும் அடிக்கடி உபயோகிக்கும சொறகள். இசையமைப்பாளர் கலயாணஜி (ஆனந்த்ஜி)யின் நோக்கின்படி நீங்கள் ஐந்து நிமிடம் இருங்கள், நான் ஒரு மணி நேரம கழித்து வருகிறேன். இம்மாதிரிதான் இங்கு காணப்படுகிறது. வழிபார்த்தல் இங்கு நிலையான சம்பவம். சோதிடம் பார்க்கவரும் நபர்கள் ஒருவர்க்கொருவர் பார்த்துக் கொண்டும், பேப்பர் படித்துக் கொண்டும் இருக்கின்றனர். மற்றவர்களுடன் உரத்த குரலில் கதை பேசிக் கொண்டிருக்கின்றனர். நானும் ஒரு தூண் போல் தனியாக உட்கார்ந்திருக்கும் போது பக்கத்திலிருப்பவர்களிடம் பேசிக் கொண்டும் கதையளந்து கொண்டிருப்பேன்.

இம்மாதிரிதான் ஒரு தடவை ஒரு நபர் கிடைத்தார். துக்கத்துடனும் கவலையுடனும் காணப்பட்டார். நான் பத்து வருடம் முன் காஞ்சிபுரத்தில் சோதிடம் பார்த்தேன். சாநதி தீக்ஷா காணடததில சொல்லப்பட்ட பரிகாரங்களை செய் இல்லா விட்டால் பினனால கஷ்டப்பட நேரிடும் என்று சொல்லியும் நான் கேட்கவில்லை. தவறு நோர்ந்துவிட்டது. மறந்துவிட்டேன். அதன் பிறகு மிகவும் கஷ்டமான, கெடுதலான சம்பவங்கள் நேர்ந்து விட்டன. வேலை போய்விட்டது. ஒரு நாள் தன் நண்பர் நாடி சோதிடம் பார்ப்பதை அறிந்து தானும் முயன்றார். அவருடைய நண்பர் தன் பெண்ணின் கல்யாண சம்பந்தமாக சோதிடம் பார்த்தார். பெண் வேறு ஜாதியில் ஒரு பையனை விரும்பினாள். அவனையே திருமணம் புரிவேன் என்று பிடிவாதம் பிடித்தாள். அந்தப் பையன் அவளை ஏமாற்றாமல் இருப்பானா என்பதை தெரிந்து கொள்வத காக சோதிடம் பார்த்தார். அந்த க ல்யாணம் தான் நடக்கும் என்று சோதிடம் சொன்னதன்படி அந்தக் கல்யாணம் நடந்தது.

இதற்கு பிறகு இந்த நபரும் விழித்துக் கொண்டார். மறுபடியும் தாம்பரம் நாடி நிலையத்திற்கு வந்திருக்கிறார். சாந்தி தீக்ஷா காண்டத்தில் சொல்லியபடி ஏன் செய்ய வில்லையென்று கேட்டார்கள். இப்பவும் செய். நிலைமை சீர்திருந்தலாம். இம்மாதிரி நம்பிக்கை கொடுக்கப்பட்டது. இரண்டு மாதம் முன் நடந்த சம்பவம். இரண்டு மாதம் பரிகாரங்களை முடித்துவிட்டு வந்திருக்கிறேன். இப்போது நிலைமை சற்று சீரடைந்துள்ளது.

இதே மாதிரிதான் ஒரு தடவை சீரோ என்ற எண் கணித சோதிடர் ஒருவரை சந்தித்தேன். அவர் தானே ஜாதகம் கணிப்பார். ஒருவருடைய பிறந்தநாள், பெயரிலுள்ள எணகளை வைத்துக் கொண்டு சோதிடம் சொல்வார். அவர் சொன்னார் "என்னுடைய தாயாரின் உடல் நிலை திடீரென்று மோசமாகியது. மார்வலி காரணமாக இரண்டு மாதமாக எல்லாவித தற்கால சிகிச்சைகள் செய்து பார்த்தும் குணமாகவில்லை. இங்கு வந்து நாடி சோதிடத்தில் சொல்லிய பரிகாரங்களைச் செய்தவுடன் மாரவலி நினறுவிட்டது. எனது தாயார இன்ஷ்யூரனஸ ஏஜெனஸி எடுத்திருந்தார். இரண்டு மாதமாக ஒரு ரூபாய்க்கு கூட யாரும பாலிஸி எடுககாததால மிகவும நம்பிக்கையிழநது மனவலிமை இழந்திருந்தார். எவ்வளவுதான சொல்லியும் சமாதானமடையாத இழந்த நம்பிக்கையை இந்த பரிகாரங்கள் மீட்டு கொடுகக வில்லையே ஏன என்று கேட்கத்தான் வந்திருக்கிறேன. இதற்கு நாடி சோதிடர சொல்லியதாவது, இதற்கு நாங்கள என்ன சொல்ல முடியும. வேண்டுமானால் அகஸதிய முனிவரையே கேளுங்கள். பிரச்ன காண்டத்தைப் பார்த்து தேவையான வற்றை கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

## இரட்டை நாடி நிலையம், வடபழனி

ஓம் உலகநாதனின அலுவலகம் Air Condition செய்யப்பட்டது. ஆயிரக்கணக்கில் கட்டணம் வாங்குவதால் செய்யத்தானே வேண்டும். அவர் அலுவலகத்தில் சிறிது நேரம் தான் இருக்கிறார். 5 தடவை முயற்சித்ததற்குப் பிறகுதான் அவரை சந்திக்க முடிந்தது. அது குறித்து பின்னால் சொல்கிறேன். அதற்கு முன் அந்த நிலையத்தில் ஒரு மலையாள அன்பரை சந்தித்தேன். அரைகுறை ஆங்கிலத்திலும், சுத்தமான சமஸ்கிருதமும் பேசும் திரு.இரவீந்திரன் தந்திரம் மந்திரங்களில் கெட்டிக்காரர். அவர் சொன்னார். சிறு பிராயத்தில் மற்ற கம்யூனிஸ்ட் நண்பர்களின் சகவாசத்தினால், தெய்வ நம்பிக்கை, பூஜை புனஸ்காரங்களில் நம்பிக்கை இல்லாமல், அவற்றை வெளி வேஷம் என்று கருதியிருந்தேன். இந்த விஷயங்கள் மனோ பலமற்றவர்களாலும், மூடநம்பிக்கையுள்ளவர்களாலும் நம்பப்படுபவை. தந்தையின் மரணத்திற்கு பின் தாயார் சொன்னார், "பிரச்சினை நம்பிக்கையுண்டா இல்லையா என்பது இல்லை. தகப்பனாரிடம் பரம்பரை பரம்பரையாக வந்த இந்த ஞான கங்கையான கல்வியை நீ அடைய வேண்டும். மற்றவர்களுக்கு உபயோக மாகயிருக்க வேண்டும். தாயின் பேச்சைக்

கேட்டு நான் அந்த வித்தையை அவரிடமிருந்து கற்றேன். மந்திர வித்தையில் மோசமானவர்களுமிருக்கிறார்கள். அவர்கள் பலவிதமாக சம்பாதிக்கவும் செய்கின்றனர். என்னைப் பொருத்த வரையில் நான் எதையும் ஒளிக்காமல் இருக்கும் மார்க்கத்தை பின்பற்றுகிறேன். கட்டணமும் உசிதமானது. நியாயமான கட்டணம் என்றால் எவ்வளவு என்று கேட்டதற்கு, ஒரு பைசா வாங்காமலும் செய்வேன். இலட்ச ரூபாய் வரை கூட வாங்குவேன் என்றார். பேச்சினிடையே அவர் என்னை 1 லிருந்து 9 வரை ஒரு எண்ணை நினைத்துக் கொள்ளச் சொன்னார். நினைத்துக் கொண்டவுடன், அத்துடன் என்னுடைய பெயரிலுள்ள எண்ணிக்கையை கூட்டச் சொன்னார். மேலும் மேலும் ஏதேதோ செய்யச் சொன்னார். பின்னால் தன்னுடை உள்ளங்கையை திறந்து நீங்கள் நினைத்த எண் இதுதானா என்று கேட்டார். ஒன்றில் ஆங்கிலத்தில் ஒன்பதும், மற்றொன்றில் ஏழும் எந்த எண்ணிக்கைகளை மனதில் நினைத்தேனோ சரியாக இருந்தது.

நீங்கள் இந்த இரட்டை நாடி நிலையத்திற்கு ஏன் வந்தீர்கள் என்று கேட்டதற்கு சில சமயம் இந்த மந்திர தந்திரங்களின் மூலம் பரிகாரமும் இந்த நாடியில் சொல்லபபடுகிறது. அப்போது அந்த பரிகாரங்களை என்னை விட்டு செய்யச் சொல்கிறார்கள் என்று சொன்னார். நான் நினைத்த எண்களை எவ்வாறு சொன்னீர்கள். இந்த கலையை எங்கு கற்றீர்கள் என்று கேட்டதற்கு மறுமுறை சந்திக்கும் போது சொல்கிறேன் என்று சொன்னார். ஆனால் பிறகு அவரை நான் இதுவரை சந்திக்கவில்லை.

இது நேற்று நடந்த விஷயம் தாம்பரம் நாடி சோதிட நிலையத்தில் சில ஜப்பானியர்கள். சோதிடம் கேட்க வந்திருந்தனர். சுஜாதா என்ற பெயருடைய மொழி பெயர்ப்பாளரும் உடனிருந்தார். அவர் மூலமாக அவர்களைப் பரிச்சயப்படுத்திக் கொள்ள விரும்பினேன். நாடி சோதிடம் சம்பந்தமாக அவர்கள் கருத்து என்ன? அவர்களுடைய பெயர் முதலிய ஓலையில் கிடைத்ததா? பதில் வந்தது 'ஆம்'. என்னென்ன பெயர் என்று கேட்ட போது ஒருவரின் பெயர் கேமாதசுகிடா இன்னொருவர் பெயர் ஜோஜூஜ உயே மாஸ்து. மூன்றாவது பெண்ணின் பெயர் உதிவாஜூவா என்று மிஸ் சுஜாதா சொன்னார். தமிழ் மொழி, ஜப்பானிய மொழியில் உச்சரிப்பு சம்பந்தமான சிறு பிழையைத் தவிர பெயர்கள் சரியாக இருந்தன என்று அவர்கள் ஒப்புக் கொண்டார்கள். ஜப்பானிய பெயர்கள் ஓலையில் எப்படி எழுதப்பட்டது என்று கேட்கப்பட்ட போது, அயல் நாட்டவர் என்று குறிப்பிட்டிருந்தது. எந்த நாடு என்று சொல்லப்படவில்லை. என்ன மதம் என்றும் குறிப்பிடவில்லை. ஏனென்றால் நாங்கள் எந்த மதத்திலும் நம்பிக்கையற்றவர்கள் என்று ஒரு ஜப்பானியர் மிஸ்.சுஜாதா மூலம் தெரிவித்தார். ஒருக்கால் மதம் சம்பந்தமாக எதுவும் சொல்லப்படாததற்கு இதுவும் ஒரு காரணமாயிருக்கலாம்.

இவர்கள் இங்கு எப்படி வர நேர்ந்தது எனக் கேட்டதற்கு திருதீபக் ஆவோயாமோ என்ற ஜப்பானியர் சத்தியசாயி பாபா சம்பந்தமாக ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். அதில் ஒரு அத்தியாயத்தில் இந்தியாவில கை விரல் ரேகையிலிருந்து ஒரு நபரின் சோதிடம் அறிய முடியும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. அதன்படி இங்கு வர ஆவல் ஏற்பட்டது. ஜப்பானில இம்மாதிரியான சோதிடக் கலை உள்ளதா எனக் கேட்டதற்கு தாங்கள் அறிந்த வரை இல்லையென்றார்கள். சீனாவில் அய்சிங் யா இசிங் என்ற சோதிடர் இருக்கிறார். ஆங்கிலத்திலும் இந்த மாதிரி ஒரு புத்தகம் உள்ளது. மூங்கில் இலைகளில் முன்னாலேயே எழுதப்பட்ட சோதிடப்படி எந்த ஓலையில் கை வைக்கிறோமோ அதிலேயே சோதிடம் எழுதப்பட்டிருக்கிறது என்று மிஸ.சுஜாதா அவர்களிடமிருந்து கேட்டு சொன்னார். அவர்களிடமிருந்து இங்கு சோதிடம் பார்த்ததில் அவர்களுக்கு மிகவும் அதிசயப்படக் கூடிய விஷயம் எது என்று கேட்ட போது, அவர்களுக்குள் பேசிக் கொண்டு பிறகு சொன்னார்கள். பெண்ணின் தகப்பனார் விவாகரத்து செய்தது. 'ஜோ புவோ'வின் மனைவியின் வியாதி சம்பந்தமான விஷயங்கள் மிகவும் சரியாக இருந்தன எனக் குறிப்பிட்டார்கள்.

ஸ்ரீ நடராஜ சர்மா தாம்பரம் நாடி நிலையத்தில் சிறிது நேரம் பொறுத்திருங்கள் என்று சொல்லி காத்திருந்தபோது சிலர் நடராஜ சர்மாவைப் பற்றிச் சொன்னார்கள். மிக வல்லவர். ஆனால் அதிகம் மிகக பேசுவதில்லை. பிரயாசைப்பட்டு, அவர் வீட்டு விலாசம் தேடி அவர் வீடு சென்றடைந்தேன். வீடு பழமையானது. வரவேற்பறையில் கிழிந்த நோட்டு புத்தகங்கள், பழைய ரிஜிஸ்தர்கள், பின்னால் தாறுமாறாக பக்கம் கிழிந்த புத்தகங்கள் மயமாயிருந்தது. அவர் வயது 65. வெற்றிலை பாக்கு போட்ட காவி மயமான பற்கள், வெண்ணிற தாடி, மேல் வேஷ்டி இல்லாத உடம்பு.

நான் என்னுடைய யூனிபார்மில் சென்றிருந்தேன். பூட்ஸ் எடுக்கும் போது உள்ளிருந்த குரலிருந்து அவர் இருக்கிறாரென்றறிந்தேன். மிக்க கர்வமுள்ளவர் என்று தெரிந்தது. எப்படி இவரை வசப்படுத்துவது என்று நினைத்தேன். உள்ளே நுழைந்தவுடன் அவர்களை வணங்கினேன். நல்லா ஆயுளுடன் இரு என ஆசீர்வதித்தார். பரிச்சயமானவுடன் உனது கோத்திரம் என்ன என்று கேட்டார். வசிஷ்ட கோத்திரம் என்று சொன்னவுடன் நானும் அதே கோத்திரம்தான் என்று சொன்னார். ஆனால் சோதிடம் பார்க்க நேரமில்லை என தட்ட முயன்றார். நான் சித்பாவன மராட்டியன், பண்டித சாத்வேளகரை அறிவேன் என்று சொன்னவுடன் 2, 3 மாதம் கழித்து சோதிடம் பார்க்கிறேன் என்று ஒத்துக் கொண்டார். கட்டணத்தைப்பற்றி கேட்டவுடன், நீ ஒரு விசித்திரமான மனிதன் என்று சொல்லி தட்டி கழிக்க முயன்றார். என்னுடைய ஓலையைப் பார்த்து சில கேள்விகள் கேட்டதற்குப் பிறகு, நீ முற்றிலும் கேள்வி கேட்பவனாக இருக்கிறாய், இம்மாதிரி பதில, பத்திரிகையில் சிகப்பு மையால

அடிக்கோடிட்ட மாதிரி சொன்னார். நடராஜ சர்மா, பராசர நாடி பார்ப்பவர். ஒலி நாடாவோ, நோட்டுப் புத்தகங்களோ கிடையாது. இந்த நாடியில் பெயர் ஏன் தெரியவில்லை முதலிய கேள்விகளுக்கு என்னுடைய நாடி உண்மையானது. நம்பவில்லையென்றால் நகரு என்று சொல்லத் தயங்கவில்லை. நான் 100 ரூபாய் கொடுத்தவுடன் மறுக்காமல் வாங்கிக் கொண்டார். மிக்க அனுபவமுள்ளவர். வித்வான் ஆனால் உடல் நலமின்மை காரணமாக தற்சமயம் அதிகம் சோதிடம் பார்ப்பதில்லை.

திரு. மோகனசுந்தரம் இவர் அகஸ்திய நாடி சோதிடர். இவர் நியூ பாங்கனா தெருவில் வசிக்கிறார். பெயரிலிருந்து பெரிய பெரிய வீடுகள் இருக்குமென்று நினைத்தேன். ஆனால் உண்மையில் அது ஒரு சந்து. நாடி கேந்திரத்தை தேடுவதற்குள் களைத்துவிட்டேன். பழைய வீடு. அதிலும் ஒரு சிறிய அறை. அங்கு ஓரிரு பனை ஓலைக் கட்டுகளுடன் தனியாக சுந்தரம்ஜி. ஹிந்து பேப்பரில் கொடுத்த விளம்பரத்தை படித்து வந்த வாடிக்கைகாரர்களுக்கு ஜோதிடம் சொல்கிறார். அதற்கு கட்டணம் ரூ.100/- நாடியில் பெயர் வருவதில்லை. என் விஷயமாக சொன்னவை சரியாக இருந்தன. கடைசியில் தங்களுக்கு ஒரு லட்சம் தங்க நாணயம் கிடைக்கும் என்று சொல்லி என்னிடமிருந்த ரூ.60/- வாங்கிக் கொண்டு பாக்கியை மணியார்டர் செய்யச் சொல்லி அடிக்கடி சொன்னார்.

சுகர்நாடி-தி.நகர் சம்பந்தமாக ஒரு சம்பவம் ஞாபகத்திற்கு வருகிறது. தியாகராய நகரில் இருக்கும் சுகர் நாடி வேறானது. இதற்கு சமஸ்கிருதத்தில் சுக நாடி என்று பெயர். நான் காலை சென்றேன். எங்கு சற்று இருங்கள் என்று சொல்லி தாமதப் படுத்துவார்களோ என்று கருதி சாமார்த்தியமாக பம்பாயிலிருந்து வருகிறேன் நேரமில்லை என்று சொன்னேன். அப்போது மணி எட்டரை, கை விரல் ரேகையை எடுத்தவுடன், பொதுக் காண்டம் எடுப்பதற்கு மத்தியானம் 2 இரண்டு மணி ஆயிற்று. அதற்குள் டேப் செய்வதற்கு சிறிது நேரம் ஆகும். அதற்குள் ஞான காண்டம் வேண்டுமானால் பாருங்கள் என்று இன்னொருவர் சொன்னார். அதைத் தேடுவதற்கு மறுபடியும் சோதிடர் உள்ளே சென்றுவிட்டார். மாலை 5 மணி ஆயிற்று. அப்போது இரண்டு பெண்கள் உரத்த குரலில் பேசிக் கொண்டிருந்தார்கள். அதில் ஒரு பெண்மணி ஆங்கிலத்தில் சோதிடரை திட்ட ஆரம்பித்தாள். நான் இங்கு 3 மணி நேரமாக காத்திருக்கிறேன், சரியான நேரம் குறித்து வரச் சொல்வதற்கென்ன, எங்கள் நேரத்திற்கு மதிப்பில்லையா என்று.

அமெரிக்கன் பேங்கில் வேலை பார்க்கும் அந்த பெண்மணி சனிக்கிழமை ½ நாள் விடுமுறை யாதலால் இங்கு அந்த நேரத்தில் வந்திருந்தாள். சிறு வயது சோதிடர் பயந்துவிட்டார். அப்போது நான் சொல்ல நேர்ந்தது. நீங்கள் மதியம் 3 மணிக்கு வந்திருக்கிறீர்கள். நான் காலை 8 மணியிலிருந்து இவ்விடம் உட்கார்ந்திருக்கிறேன். டீ குடித்தது தான், சாப்பிடக்கூட இல்லை. முதலில் வந்தவர்களைக் கவனித்தவுடன் தான் பிறகு வந்தவர்களைக் கவனிக்க முடியும். சோதிடம் பார்க்க வந்தால் அவர்கள் விருப்பப்படிதான் நடந்து கொள்ள வேண்டும். இல்லையென்றால் வெளியே செல்லுங்கள். அதற்குப் பின் அவர்கள் பேசுவதை நிறுத்தினார்கள். அதற்குள் அவர்கள் ஓலை கிடைத்து விட்டது. பிறகு என்னுடைய சோதிடம் சொன்னார்.

ஆனால் ரயிலில் திரும்பும்போது 9½ மணி. நான் பதினோரு மணி நேரம் நாடி நிலையத்திலிருந்தேன். அந்த பெண்மணிகளுக்கு சொல்லும் போது பிஸ்கட்டும் டீயும் தருவித்தார்கள். ஆனால் ஞான காண்டத்தை படித்து நான் யோசனையில் ஆழ்ந்திருந்தேன். வருங்காலத்தில் என் நிலை என்னவாக இருக்கும் என்று சிந்தித்துக் கொண்டிருந்தேன்.

திநகரில் உள்ள சுகர் நாடியின் முக்கியமானவரான திரு. கருணாகரன் மிகவும் படித்தவர், கெட்டிக்காரர். அமெரிக்காவின் ஒரு அமைப்பு அவருடைய நாடியை பாராட்டியது மட்டுமல்லாமல் கௌரவ பட்டமும் கொடுத்து மரியாதை செலுத்தியுள்ளது. சுகர் நாடி மட்டுமல்லாமல் புதநாடி, சிவ நாடி ஆகியவையும் இங்கு உள்ளன. ஹிந்தியில் மொழி பெயர்ப்பு வசதியும் உள்ளது. சென்னையின் மத்திய பகுதியில் இருப்பதால் இக்கேந்திரத்தை மிக சுலபமாக அடையலாம்.

### ரமணி குருஜியும் காகபுஜண்டர் [பிருகு-[illegible]] நாடியும்

பலவேறு நாடி கிரந்தங்களை ஆராய்ச்சி செய்யும் போது என்னுடைய வீட்டிலிருந்து 2 கி.மீ. தூரத்தில் ஆனால் அகஸ்திய நாடியிலிருந்து வேறுபட்ட காகபுஜண்டர் நாடி நிலையம் உள்ளது என்று அறிந்தேன். விமானப்படை நிலையத்தின் அருகிலேயே 2 நாடி சோதிட நிலையங்கள் இருந்த போதிலும் கேம்பில் இருப்பவர்களில் மிகக் குறைந்த நபர்கள் மட்டுமே இதைத் தெரிந்தவர்களாயிருந்தார்கள். நாடி சோதிடம் சம்பந்தமான பேச்சுக்கள் வீடு வரையிலும் தான் இருந்தது. நான் மட்டும்தான் இது விஷயமாய் சுற்றி வந்தேன். பார்ட்டிகளில் என்னுடைய சிநேகிதர்கள், சார், இன்று எந்த நாடி சோதிடரிடம் சென்றிருந்தீர்கள். எந்த காண்டத்தை படித்தீர்கள், என்ன புதிய ஆச்சரியமான சம்பவங்கள் தெரிந்து வந்தீர்கள் என்று பரிகாசத்துடன் கேட்பார்கள். என்னுடன் வேலை செய்யும் ஒருவர் எனக்கு முன்னால் சாந்தி தீக்ஷை செய்து வேறு இடத்திற்கு மாற்றலாகிச் சென்றுவிட்டார். அவர் வேலை விடும்படி நேர்ந்தது. ஆனால பிற்காலத்தில் வேறு எழுதப்பட்டிருந்தது. குழந்தைப் பேறு சொல்லப்பட்டிருந்தது. என்ன ஆகப்போகிறதோ பார்க்கவேண்டும். அலுவலகத்தில் உட்கார்ந்தபடியே லீவில் போகும் நபர்களிடம் எங்கெங்கு நாடி சோதிட நிலையம் இருக்கின்றன என்று விசாரித்து வந்தேன். தியஸாபிகல் சொஸைட்டி லைப்ரரியில்மெம்பராக சேர்ந்தேன்.

இவ்விதம் பேச்சுவாக்கில் ரமணி குருஜியின் ஆசிரமம் போன்ற நாடி நிலையத்தைப் பற்றி அறிந்தேன். ஒரு வெள்ளிக்கிழமை மாலை, மழையின் காரணமாக நனைந்த அழுக்கான அரை நிஜாருடன் அங்கு சென்றடைந்தேன்.

ஒரு நடுத்தரமான ஹாலின்

பாதியில் வெவ்வேறு சிறிய, பெரிய தெய்வீகப் படங்கள், அம்மாதிரியே பல வேறு உலோகங்களிலான சிலைகள் மிகவும் கவர்ச்சியாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. இவைகளில் சிவன் பார்வதியைப் போன்ற ஒரு மகரிஷியின் படம் மிகவும்முக்கியமாக காணப்பட்டது. எல்லாவற்றிலும் மணம் கமழும் மாலைகள். ஊதுபத்தி மணத்தினால் ஹால் மிகவும் கம்பீரமாக காணப்பட்டது. நடுவில் ரமணி குருஜி ஒரு ஆசனத்தில் அமர்ந்திருந்தார். கையில் பனை ஓலையுடன் தமிழில் ஏதோ பாடிக்கொண்டிருந்தார். மைக்கில் குரல் ஸ்பஷ்டமாகவும், நன்றாகவும் இருந்தது. மனதை கவரக்கூடிய சங்கீத அலை மிகவும் இனிமையாக காணப்பட்டது. கர்நாடக சங்கீதமாயிருந்தாலும் பாடும் முறை வேறாக இருந்தது. நாடி வாசிப்பதில் குருஜி ஈடுபட்டிருந்தார். அரைமணிநேரம் பாடிய பிறகு நாடி கட்டை மிகவும் மரியாதையுடன் சுற்றி வைத்தார். ஆரத்தி முடிந்தவுடன் அதுவரை குழுமியிருந்த 60/70 பக்தர்களுக்கு தயிர்சாதம் மற்றும் சில பதார்த்தங்களும் இலையில் பரிமாறப்பட்டன. 15 நிமிடங்களுக்கு பிறகு எல்லோரும் பிரசாதம் வாங்கியவுடன் மறுபடியும் ஹாலில் ஜமக்காளத்தில் உட்கார்ந்தார். இப்போது குருஜியை சந்திப்பதற்காக ஒவ்வொருவராக அழைக்கப்பட்டனர். பக்கத்தில் போய் சாஷ்டாங்கமாக நமஸ்க்ரித்து குருஜியிடம் தங்கள் குறைகளை கூறியவுடன் குருஜி எதிரில் வைக்கப்பட்ட ஒன்பது சோழியை பிரட்டி, அதைப் பார்த்துக்கொண்டு மேலும் எதிரில் உள்ள ஒரு கண்ணாடியில் சிந்தைனையை ஒருமனதாக்கி பார்த்துக்கொண்டே பக்தர்களின் கோரிக்கைகளுக்கு பதிலளித்தும், எழுதிக் கொடுத்தவாறு இருந்தார். என்னுடைய முறை வந்தவுடன் நான் நமஸ்கரித்து சொன்னேன். முதல் முறையாக வந்திருக்கிறேன். தமிழ் தெரியாது. ஆசீர்வாதம் செய்யுங்கள் என்று சொன்னேன். என்னைக் குறித்து எதுவும் கேட்காமல் ஒரு குங்குமப் பொட்டலத்தை கொடுத்து இந்தியில் எழுதப்பட்ட ஒரு புத்தகத்தை என்னுடைய கையில் வைத்தார். மேலும் சொன்னார், " காகபுஜண்டர் நாடி குறித்து பேச வேண்டுமென்றால் சாவகாசமாக வாருங்கள்". குருஜியின் ஆசிரமத்திலிருந்து விடைபெறுவதற்கு முன் சிலரிடம் பேசியபோது, குருஜியிடம் காகபுஜண்டர் நாடி ஓலைகள இருக்கின்றன. அங்கு தொங்கவிடப்பட்ட படங்கள் காகபுஜண்டர், மேலும் அவருடைய சிஷ்யை பஹுலாவினுடையது என்றும் தெரியவந்தது. சாதாரணமாக மாலை 7 மணியிலிருந்து 9 மணி வரை குருஜி சோழியை பிரட்டி அதனபடி நாடி ஓலைகளைப் பொறுக்கி எடுதது வந்திருப்பவர்களின் கேள்விகளுக்கும் பிரச்சினைகளுக்கும் பதிலளிக்கிறார். இங்கு மற்ற இடங்கள் போல் கட்டைவிரல் ரேகையைப் பார்த்து நாடி சோதிடம் சொல்லப்படுவதில்லை. இந்த நாடியின் முக்கியத்துவம் என்னவென்றால் இது ஒரு ஜீவ நாடியாகும். நாடி சோதிடர் (குருஜி) வாயிலாக, காகபுஜண்டரே பேசுவதாக கருதுகின்றனர். அவரை சந்திக்க வருபவர்களில் பல டாக்டர்களும் தங்களுடைய சிக்கலான விஷயங்களை தீர்ப்பதற்காகவும், வழிவகைகளை அறியவும் வருகின்றனர். சில வக்கீல்களும், இஞ்சினியர்களும் தங்களுடைய தொழில் முறையில் உள்ள சிக்கல்களுக்கும், வழிகாட்டுமாறு கோரி வருகின்றனர். குருஜி எல்லா கலைகளிலும் வல்லவராக இல்லாத போதிலும் அவர் மூலம் சொல்லப்பட்ட உபாயங்களாலும் உயர்ந்த அணுகு முறையாலும் எல்லாரும் பயனடைகின்றனர். இவையெல்லாவற்றிற்கும் பதிலாக குருஜி எதுவும் கேட்பதில்லை. வாங்குவதுமில்லை. எல்லா ஆருடங்களும் எவ்வித கட்டணமும் பெறாமல், தொண்டாகவே கருதப்படுகின்றன.

ஏப்ரல் மாதத்தில் (வைகாசி) காகபுஜண்டருடைய குருஜியுடைய பிறந்ததினம் வருகின்றது. அப்போது பக்கத்திலுள்ளவர்கள், மேலும் ஜெர்மனியிலிருந்தும் அவருடைய பக்தர்கள் வருகிறார்கள். அப்போது பத்து நாட்களுக்கு ஒவ்வொரு நாளும் 10,15 ஆயிரம் மேல ஜனங்களுக்கு அன்னதானம் அளிக்கப்படுகிறது. மேலும் பலவித நிகழ்ச்சிகளும நடைபெறுகின்றன. சங்கீதம, நாடகம், நாட்டிய நிகழ்ச்சிகளும் நடக்கினறன.

தாம்பரம் ரெயிலவே ஸ்டேஷனிலிருந்து 5,6 கி.மீ. தூரத்தில் சேலையூர் கிராமத்தில பாரத இன்ஞினியரிங் காலேஜ எதிரிலுள்ள காலனியில், சென்னை நகரத்திற்கு வெளியே இருந்தும் கூட கார்கள், ஆட்டோக்கள், ஸ்கூட்டர்கள மூலம் ஜனங்கள் வந்தவண்ணம் இருக்கிறார்கள்.

ரமணி குருஜியின ஆசிரமத்திற்கு அடிக்கடி செல்ல நேரிட்டது. இது வரை தனிப்பட்ட முறையில் 3 முறை நாடி சோதிடம் வாசிக்கப்பட்டது. அதில் என்னைப் பற்றி, சந்திரகாந்தா, நாட்டின் பாதுகாப்புப் படையில் வேலை, காற்றில் பறந்து எதிரிகளை வீழ்த்தும விமானப்படை அதிகாரி, பலவித நாடி சோதிடம் பற்றி கற்றல், அதிலுள்ள ரகசியங்களை அறியமுயலும் நபர், எனப் கூறப்பட்டுள்ளது.

நாடி சாஸ்திரம் என்பது என்ன. நாடி சோதிட இலக்கிய கர்த்தாக்களின் அறிவு சாமர்த்தியம், மேலும் என்னுடைய வாழ்க்கையில் நடக்கப்போகும் ஆச்சரியகரமான சம்பவங்கள் குறித்தும் சொல்லப்பட்டிருக்கிறது. இது சம்பந்தமான பல விஷயங்களை தக்க நேரத்தில் வெளிப்படுத்துவேன் எனவும் அதில் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஒரு இடத்தில் தன்னுடைய தெய்வீக சக்தியை பற்றி வர்ணிக்கும்போது நாடி முனிவர் கூறுகின்றார். ஹே, சிறுவனே எங்களுடைய சக்தி மேலும் அறிவு உன்னுடைய சிந்தனா சக்திக்கு அப்பாறபட்டது. உதாரணத்திற்கு மட்டும் ஒன்று சொல்கிறேன். ஒரு கண் இமைக்கும் நேரத்தில் நான் 60 ஆயிரம் ஜீவன்களின் வாழ்க்கைப் பற்றி முற்றிலும் அறிய முடியும் நான் முக்காலமும் உணர்ந்தவன்

எல்லா இடங்களிலும் நிறைந்துள்ளவன். ஆகையால் தாயின் கர்ப்பத்திலிருக்கும் சிசுவின் வாழக்கையைப்பற்றியும் அறிய வல்லவன். ஒரு தடவை நாடி சோதிடம படிக்கும் போது ஓலைச்சுவடியில் குங்குமம் வெளிப்பட்டது. இது மிகவும் மங்களகரமானதும், பவித்ரமானதாகவும் கருதப்பட்டது.

ஒரு தடவை என் மனைவிக்கு தன்னுடைய சகோதரனைக் குறித்து கவலை ஏற்பட்டது. அத்துடன் என்னுடைய சிற்றப்பா பிரசித்தமான சரித்திர ஆசிரியர் ஸ்ரீ P.N. ஒக, ஜோஷி என்றவரின் குடும்ப பிரச்சினை பற்றி நாடி சோதிடம் மூலம் அறியச் சொன்னார். தாம்பரம் மற்றும் இதர நாடி நிலையங்களில் கால் வைககக்கூட இடமில்லை. முதலில் கொடுக்கப்பட்ட கட்டை விரல் ரேகையை வைத்துத் தான் காரியம் ஆக வேண்டும். அப்போது எனக்கு ரமணி குருஜியின் ஞாபகம் வந்தபோது எங்களுடைய பிரச்னை பற்றி சொன்னோம். சோழியை பிரட்டி, கண்ணாடி பார்த்து ஒரு காகிதத்தில் அதற்கு விளக்கம் அளித்தார். சம்பந்தப்பட்ட வர்களின் அனுமதியின்றி அதை இங்கு வெளியிட இயலவில்லை. ஒரு தடவை விமானப்படை அதிகாரியை சந்திததேன. அவருடைய பெண் திடீரென்று பள்ளியிலிருந்து காணாமற போய்விட்டாள். போலீஸில் தேடியும் பயனில்லாமல் ரமணி குருஜியிடம் சென்று கேட்டவுடன், அந்த ஆபீஸர் எந்த ஊரிலிருந்து மாறி வந்தாரோ, அதே ஊரில் பத்திரமாக இருப்பதாகத் தெரிவித்தார். அது சரியாக இருந்தது. அதிலிருந்து அவர் நாடி சோதிடத்தை நமப ஆரம்பித்தார்.

---

நாடி சோதிடம் பற்றிய புத்தகம் மராத்திமொழியில் முதலில் வெளியிடப்பட்டபோது (1994 செப்டம்பரில், நாடி சோதிடம் ஒரு அதிசயமான கண்டுபிடிப்பு) வாசகர்களிடமிருந்து உற்சாகமான வரவேற்பு கிடைத்தது. இந்தி மொழியில், ராஷ்ட்ரீய சஹாரா என்ற தினசரியில் 22 டிசம்பரில் வெளியான கட்டுரைக்குப் பிறகு நாடிசோதிட நிலையங்களுக்கு மக்கள் செல்ல ஆரம்பித்திருக்கிறார்கள்.

மராததியில் வெளியான புத்தகம் மிகவும பிரபலமாயிற்று. அதன பிரதிகள கடைகளில் வாங்கப்பட்டு, மக்களிடம் இலவசமாக விநியோகிக் கப்பட்டன. ரத்னகிரியில் ஒரு அன்பர் ஹீராசநத் புட்டாலா 200 பிரதிகள் ஜெராக்ஸ் செய்து தன்னுடைய சிநேகிதர்களுக்கு கொடுத்துள்ளார். வாசகர்களின் இந்த ஆர்வம் எனக்கு மேலும் உறசாகம கொடுததது.

இது விஷயமாக உலகப புகழ்பெற்ற சோதிட நிபுணர் டாக்டர் நார்லீகர் மேலும் மகராஷ்டிர மூடநம்பிக்கை ஒழிப்பு இயக்கம் (155, சதாசிவபேட், சதாரா 415001) தின் டாக்டர் நரேந்திர தபோல்கர் போன்றவர்களோடு கடிதப் போக்குவரதது இருநதது. கொலலாபூரிலிருநது வெளிவரும் ஒரு மராததி இதழ (தைனிக புடாரி 16 ஜூலை 1991) மூடநமபிககை ஒழிப்பு இயக்கம் மூலமாக என்னுடைய மராத்தி புத்தகம் “நாடி சோதிடம்” மூலமாக நான் மூடநம்பிக்கையை பரப்புகிறேன். அதனால் ஆபத்து என்றும் அறைகூவல் விடபபட்டது. நாடி சோதிட பனை ஓலையில் பெயர் முதலியன இருப்பதிலலை. இது எல்லாம் மனப்பிரமையாகும். ஆபிரஹாம்கோவூர் முதலியவர்கள் இது எல்லாம் பேத்தல் என்று சொல்கிறார்கள். எவர் இது உணமை என்று நிரூபிக்கிறார்களோ அவர்களுக்கு 5 லட்சம் ரூபாய் இனாம் கொடுக்கததயார் என அறிவித்திருக்கிறார்கள். நான் அவர்களுக்கு சொல்வது என்னவென்றால் நீங்கள் ஏன் தாங்களாகவே உங்கள் சோதிடத்தை நாடி மூலம் அறியக் கூடாது. நாடி சோதிடம் பார்க்காமலேயே அது உண்மையல்ல என்று எப்படி சொல்லலாம்? நானும் உங்களைப போல் இந்த நாடி சோதிடம் பார்ப்பதற்கு முன்னால் நம்பிக்கை இல்லாதவனாகததான் இருந்தேன். பின்னால் 100 சதவிகிதம் எல்லாம் சரியாக இருந்தவுடன் தான் இதில் ஏதும் ஏமாற்றுவித்தை இல்லை என்ற முடிவுக்கு வந்தேன். நாடி சோதிடம் பராசக்தியின் அருளால் நமது ரிஷிமுனிவர்களின் ஞானதிருஷ்டியால் ஏற்பட்டிருக்க வேண்டும். ஆகையால கேவலம இந்த மானுட புத்திக்கு அப்பாற்பட்டது. நான் அவர்களுககு எழுதியுள்ளேன். நீங்கள் 5லட்சம் ரூபாய் தருவதாக கூறுகிறீர்கள். ஏன் நீங்களே முன் வந்து இதை பரிசோதித்து அறியக்கூடாது?

கடந்த 9, 10 மாதங்களாக மூடநம்பிக்கை ஒழிப்பு இயக்கத்தினர் சென்னையிலிருக்கும் நாடி கேந்திரத்தில் வந்து நேரில் பரிசோதிக்கும் என் யோசனையை ஏற்கவில்லை. நாங்கள் எங்களுடைய வருங்காலத்தை பார்த்து அறிய வேண்டிய அவசியமில்லை நாங்கள் நாடி சோதிடம் பொய்யானது என்பதை சாஸ்திரிய முறையில் நிரூபிப்பதற்காக பூனா மற்றம் ஷோலாப்பூர் முதலிய இடங்களில உள்ள தமிழ அறிந்தவர்கள் மூலம நாடி கிரந்தத்திலுள்ள மொழி தமிழல்ல என்பதை நிரூபிக்க முடியும் நாடி கிரந்தங்களே தமிழில் இல்லாத போது அந்த மொழியில் எழுதப்பட்டிருக்கும் வருங்காலம எப்படி உணமையாகும் என்று வாதாடுகிறார்கள். வாசகர்கள் தாஙகளே மூட ஒழிப்பு இயககத்தினரின் மேலும் மற்ற அறிவு ஜீவிகளின சாஸ்திரத்திறகு விரோதமான போக்கு குறிதது இதன மூலம் தெரிந்து கொள்ளலாம.

இதுவரை இந்த அறைகூவல் விடுததவர்களில் எவரும் நான் பலமுறை சொல்லியும எவரும எநதநாடி நிலையத்திறகும சென்றுவர முன்வரவில்லை. ஆனால விஞ்ஞான, சாஸ்திரிய முறையில் இதை சோதிக்க வேண்டும் என்று அடிக்கடி கூறும் மூட நம்பிக்கை ஒழிப்பு இயக்கததினரில் எந்த உறுப்பினரும ஏன் நாடி சோதிடம் பாரககக கூடாது? 50 / 100 பேருடைய கட்டைவிரல் ரேகையை அனுப்பி என்னை ஆருடம் பார்க்கும் வலையில் சிக்க வைத்து அது சரியானால் Wing Commander OAK க்கின் தந்திரம் என்று சொல்லலா

என்று நினைப்பது சுலபம். ஆனால் அதிர்ஷ்டவசமாக எனது கட்டுரையைப் படித்த பல நபர்கள் தாங்களே நேரில் வந்து நாடி சோதிடம் பார்த்து இது உண்மைதான் என்று என்னுடைய கருத்தை வலியுறுத்துகின்றனர். புடாரி என்ற தினசரி தன்னுடைய 3-9-95 இதழில் என்னுடைய கட்டுரையை வெளியிட்டிருக்கிறது.

இந்த புத்தகம் மற்றும் எனது கட்டுரையைப் படித்த வாசகர்களில் பலர் நான் நாடி சோதிடர்கள் பால் மிகவும் பற்றுடையவனாகக் கருதலாம். நாடி சோதிடம் தெய்வீகமானது இதில் சந்தேகமில்லை. இது எவர்கையில் உள்ளதோ, அவர்கள் அதை மதிக்கவும், மனிதமேம்பாட்டுக்காகவும் அதை உபயோகிக்கிறார்களா? அல்லது வியாபார நோக்கில் அதிகலாபத்திற்காக உபயோகிக்கிறார்களா? நாடி சோதிட இலக்கிய கர்த்தாக்களைக் குறித்து என்னுடைய கருத்தையும் அனுபவத்தையும் சொல்வது அவசியமெனக் கருதுகிறேன்.

நாடி சோதிட இலக்கியத்தைப் பற்றி கூறும் போது வட இந்தியாவில் எனது அனுபவத்தை படித்த வாசகர்கள், நான் அவைகளை எவ்விதம் கண்டித்தும் விமர்சித்தும் இருக்கிறேன் என்பதை அறிவர். மேலும் கண்டிக்கவும் பின் வாங்கமாட்டேன். நான் எந்த நாடி சோதிடரின் உறவினனோ அல்லது எந்த நாடி சோதிடரும் எனது நன்மையைக் கருதுபவர்களும் அல்ல. அடிக்கடி சந்திப்பதனால் அவசியம் எங்களுக்குள் ஒரு அந்தரங்க நட்பு அவசியம் ஏற்பட்டிருக்கக் கூடும்.

பின்னால் என்னுடைய கட்டுரையையோ அதன் மொழிபெயர்ப்பை படித்தோ, அவர்கள் குறித்து நான் எழுதியது நான் அப்படிச்சொல்லவில்லை என்று மறுத்தால் வாசகர்களே நான் சொல்வது சரியா அல்லது அவர்கள் கூற்று சரியா என முடிவு எடுக்கலாம்?

அகஸ்தியர் நாடி நிலையம் தாம்பரம், மகாராஷ்டிரம் மற்றும் தேசத்தின் மற்ற நாடி சோதிட நிலையங்களுக்கு செல்பவர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. பலர் இந்த நாடி சோதிடம் மிக்வும் அறபுதமானது 100 சதவிகிதம் உண்மையாக உள்ளது என்றும், விபரமாய் எழுதியது குறித்து நன்றியும் தெரிவித்திருக்கின்றனர்.

நாடி சோதிடங்கள் பற்றி குறைகளும் எமக்கு வந்திருக்கின்றன. அடுத்த காண்டம் பற்றி சொல்வதற்கு அட்வான்ஸ் பெற்றுக் கொண்டு தாமதப்படுத்துவது. போனில் பேசினால் 10,15 தினங்கள் கழித்து வருமாறு கூறுவது. கடிதங்களுக்கு பதில் போடாமை முதலியன. மிகுந்த கடுமையாக உள்ள அனுபவங்கள் குறித்தும் எழுதியுள்ளனர். நானும் இதுபோன்ற அனுபவங்களை அடைந்துள்ளேன். மக்களின் இந்த குறைகள் குறித்து காஞ்சிபுரம், தாம்பரம் நிலையத்தில் உள்ள சோதிடர்களிடம் இது பற்றி கேட்டபோது "ஐயா தாங்கள் கூறுவது சரிதான். ஆனால் நாங்கள் என்ன செய்யக்கூடும்" என்று சொல்லி அவர்கள் தங்கள் கருத்தையும் கூறினர். "ஒவ்வொரு நாளும் ஆர்வமுள்ள வாடிக்கைக் காரர்கள் 13,14 நபர்களின் சாந்தி தீக்ஷை காண்டம் வரை படிப்பதறகே மூச்சு முட்டுகிறது. ஒவ்வொருவரும் முதல் முதல் நாடி சோதிடம் பார்க்கும்போது எங்களை சந்தேகக் கண்களுடன் பார்க்கின்றனர். அவர்களுடைய எல்லா கேள்விகளுக்கும் விடையளிக்காமல் அவர்களுக்கு நம்பிக்கை வருவதில்லை. மேலும் மொழி தெரியாத இடர்ப்பாடு வேறு. ஆகையால் எங்களைப் பற்றி குறை கூறுவது இயல்பு. நாங்கள் சொல்வது அவர்களுக்கு புரிவதில்லை. அவர்கள் சொல்வது எங்களுக்கு புரிவதில்லை. மொழி பெயர்ப்பாளர்களின் திறமையின்மையாலும் ஏனோ தானோ என்று காரியம் ஆனால் சரி என்று தனக்குப்படுவதை சொல்வதாலும் சில சமயம் கஷ்டமாக இருக்கின்றது. மொழி தெரியாத காரணத்தால் ஒரு முறைக்கு இரண்டு முறையாக, தமிழ் தெரியாதவர்களுக்கு விளங்கவைக்க வேண்டியுள்ளது. ஆகையால் அவர்களுக்காக தற்சமயம் கட்டணத்தையும் அதிகரித்துள்ளோம். ஒவவொரு காண்டததிறகும் பிற தேசத்தவாகளுக்கு ரூ.500/- வாங்குகிறோம். தங்களுடைய புததகத்தையும், கட்டுரைகளையும் படித்து பலர் எங்களிடம் முன்கூட்டி அறிவிக்காமலேயே வருகின்றனர். அவர்களையும் திருப்திப்படுத்த வேண்டியுள்ளது. இவர்களுக்காக சில சமயம் இரவு 9மணியிலிருந்து 12 மணி வரை வேலை செய்யவேண்டிருக்கிறது. தாங்களே இதையெல்லாம் பார்க்கிறீர்கள். வருபவர்களின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டேயிருக்கிறது. ஆகையால், வேண்டுமென்று செய்யவில்லை. ஆனால் அவசியம் காரணமாக தாமத மேற்படுகிறது".

## அறிமுகம்



**R. GOPAL RAO.** B.A.,
Praveen Pracharak, Sahitya Ratna (Hindi)
Plot No. 24, Metha Nagar, Selaiyur Post,
Madras - 73.

**R. கோபால் ராவ்,** இளங்கலை,
ப்ரவீன், ப்ரசாரக்,
சாகித்யரத்னா (இந்தி)

21-7-1928 ல், கும்பகோணத்தில் ஒரு ஏளிய தென்னிந்திய மராத்தி குடும்பத்தில் பிறப்பு, நேடிவ் உயர் நிலைப்பள்ளியில் உயர்நிலைப் படிப்பு, திருச்சி, தஞ்சை மாவட்டங்களில் பொருளியல், குற்றவியல் நீதிமன்றங்களிலும், சென்னை நகர பொருளியல் குற்றவியல் நீதி மன்றத்தில் இந்தி மொழி பெயர்ப்பாளராகவும், சிறப்பு நிலை தலைமை எழுத்தராகவும் பணி புரிந்து ஒய்வு பெற்றவர். பணி புரியும் காலத்திலேயே, பட்டப்படிப்பும், இந்தியில் சாகித்ய ரத்னாவரை படித்து முடித்துள்ளார். ★

வேண்டுமென்று நாங்கள் எப்போதும் செய்வதில்லை. ஆனால் போனிலோ அல்லது கடிதம் மூலமோ விசாரிக்கும்போது 10,15 நாட்கள் பொறுங்கள் என்று தாமதிப்பது தவிர்க்க முடியாததாக ஆகிறது. தாங்களே இதற்கு ஒரு உபாயம் செல்லுங்கள் என்று அவர்கள் சொல்கின்றனர்.

நான் சொன்னேன் நாடி சோதிடம் சொல்வது தவிர மற்ற இதர விஷயங்க்ளை சொல்வதற்கு தனியாக ஒரு எழுத்தரை வைத்துக் கொள்ளுங்கள். தனியாக ஒரு ரிஜிஸ்டரில் வரிசைக்கிரமமாக பதிவு செய்து கொண்டு வாடிக்கைக் காரர்களுக்கு நாடிபுத்தகமோ, ஓலையோ கிடைக்கும் வரை தொடர்ந்து கொண்டிருங்கள் அல்லது நீங்கள் முன்தொகை வாங்குவதை நிறத்துங்கள். கூட்டத்தின் காரணமாக முடியவில்லை என்றால் காரணத்தை அவ்வாறே விளக்கிச் சொல்லுங்கள். தாம்பரம் நாடி கேந்திரத்திலுள்ள திரு. சுப்புரத்தினம் திரு. சிவஷண்முகம், காஞ்சியிலுள்ள பாலசுப்ரமணியம் முதலியோர், பின் தங்கியவைகளைக் கவனிப்பதற்கு தனியாக ஆட்களை நியமித்திருப்பதாகச் சொன்னார்கள். இந்த நிலயங்களில் உள்ள மற்ற குறை பாடுகள், முறையே குடிதண்ணீர் இல்லாமை, பருகுவதற்கு வேறு பானங்கள் இல்லாமை, ரோடுவசதி, கொசுக்கடி, டாய்லெட் வசதிகள், கட்டைவிரல் ரேகை எடுத்தவுடன் கை அலம்ப வசதியின்மை சுவற்றில் புகை, தூசி அடையாளங்கள் முதலியவற்றில் சிறிது முன்னேற்றத்தை மறுமுறை போகும்போது காண நேர்ந்தது.

அகத்தியர் நாடி - கிண்டி : "நாடி சோதிடம்" என்கிற எனது மராததியில் எழுதப்பட்ட புத்தகத்தை அந்தப் புத்தகத்தில் சொல்லப்பட்ட எல்லா நாடி நிலையங்களுக்கும் கொடுத்துவத்தேன். ஓம் நமசிவாயம் இம்மாதிரி ஒரு நாடி நிலையத்தை நடத்துபவர். பெரிய பங்களா, 2,3 கார்கள் முதலியவற்றிற்கு சொந்தக்காரர். பணக்காரராக காணப்பட்டார். 30,35 வயது. ஆங்கிலத்தில் புலமை. தனியாகவே ஒரு ஹாலில் மேசை, நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். நான் என்னுடைய புத்தகத்தின் ஒரு பிரதியை அன்பளிப்பாக அளித்தேன். அதைப் பார்க்காமலேயே தாங்கள் ஆங்கிலத்தில் எழுதியிருக்க வேண்டும். மராத்தி மொழி எவ்வளவு பேருக்கு தெரியும். இவ்வளவு தூரம் யார் வருவார்கள் என்று குறை சொன்னார். எனக்கு என் பெயரில் ஒரு விளம்பரம் கொடுக்க வேண்டும். நீங்கள் எழுந்திருங்கள். என்னை சந்திக்க காத்திருக்க வேண்டும் என்று சொல்லியவுடன் என்னால் பொறுமையாயிருக்க முடியவில்லை. வெளியில் யாரும் இல்லை. ஆதலால் நேரமில்லையென்று நாடகமாடாதீர்கள் உங்களுடைய விளம்பரம் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் ஹிந்த் பத்திரிகையில் வெளியாகிறது. உங்களிடம் இருக்கும் நாடி இலக்கியம் எந்த மொழியில் இருக்கிறது. அதில் ஆருடம் சொல்லப்படும் முறை என்ன. அதில் ஜாதகரின் பெயர் இருக்கிறதா ?. அப்படி இருந்தால் அதன் ரகசியம் என்ன. தங்களிடம் எவ்வளவு சுவடிகள் இருக்கின்றன. இந்த சுவடி தங்களிடம் எப்போது எப்படி கிடைத்தது. நாடி சோதிடம் பொய் என்று தங்களிடம் குறைகள் வந்துள்ளனவா முதலிய கேள்விகள் நான் உங்களை கேட்பதற்காக வந்திருக்கிறேன். தாங்கள் என்னை இவ்வாறு துறத்த முறச்சிப்பது முறையாகாது என்று சொன்னேன்.

அதன் பிறகு அவர் சொன்னார். இது அகத்தியர் நாடி. இது எவ்வளவு புராதனமானது. இது எப்படி தயாரிக்கப்பட்டது என்பதுகுறித்து எனக்குத் தெரியாது. இந்த நாடியில் ஜாதகத்தை வைத்து சோதிடம் கூறப்படுகிறது. இதில் ஜாதகரின் பெயர் இருப்பதில்லை. நான் ரூ. 504/- கட்டணம் வாங்குகிறேன். நான் மற்ற சோதிடர்களைப்பற்றி கூறும்போது, அதை ஏதோ முதன் முதலாக கேட்பது போல் முகத்தை வைத்துக்கொண்டிருந்தார். ரமணி குருஜி எந்த கட்டணமும் வசூலிப்பதில்லை என்று சொல்லியபோது அவரால் சும்மா இருக்க முடியவில்லை. இம்மாதிரி சோதிடர்கள் சோதிடததை மிகக மலிவாக்குகிறார்கள். என்போன்ற சோதிடாகளிடம் வருவதை தடுக்கிறார்கள். மிகக தவறு. இவர்கள் பணம் வாஙகவிலலை என்ற சாக்கில், எழுதது மூலம கொடுப்பதற்கான கட்டணம என்று வாங்குகிறார்கள். இவாகள் இந்த நாடி சாஸ்திரத்தின் சொந்தக்காரர்கள் அல்ல. வாடிக்கைக்காராகளை கொள்ளை யடிக்கக் கூடாது. அவரிடமிருந்து விடைபெறும்போது நான் தங்களின் கூற்றை மறுபடியும பரிசீலிக்கிறேன் என்று சொன்னேன்.

இரட்டை நாடி திரு ஓம் உலகநாதன் : இவர் பெரிய மனிதா். இவருடைய அலுவலகம் Air Condition செய்யப்பட்டது. பெரிய பெரிய நடிகர் நடிகைகள், அரசியல் வாதிகளுடன் போட்டோ எடுத்து வைத்துக் கொண்டிருக்கிறாா. இவரைப்பற்றி நான் தனியே கூறியிருக்கிறேன். அதில் சொல்லியிருக்கும் திரு. ராமகிருஷ்ணனின் தொழிற்சாலை எனது அலுவலகத்திற்கு அருகில் உள்ளது. அவர் திரு. உலகநாதனைப் பற்றி மிகவும் புகழ்ந்து பேசியிருக்கிறார். இரட்டை நாடிக்கு இணையான வேறு நாடி இல்லை என்பது அவரது வாதம். ஆனால் அவர்கள் படிக்கும் போது கூட்டியும் குறைத்தும் சொல்லி பலவிதத்தில் பணம் பிடுங்குவதில் பின்வாங்குவதில்லை. அவர்களுடைய பேராசை நாடி சோதிடத்தின் பால் வெறுப்படைய வைக்கிறது. என்னிடம் மிகவும் அதிகமாக பணம் வாங்கியுள்ளார். இது என் அனுபவம். தாங்கள் இது குறித்து எழுத வேண்டும் என கேட்டுக்கொண்டார்.

With Best Compliments From

Thiru. Krishan Chandar
Tambaram West
Madras - 600 045.

**வட இந்திய நாடி நிலைய அனுபவங்கள் :**

1994 நவம்பர் மாதத்தில் நான் தில்லி, மீரட், ஹோஷியார்பூர் நாடி நிலையங்களை பார்க்க சென்றிருந்தேன். அவர்களுடைய விருந்தோம்பலும், பேசும் முறை, நடையுடை பாவனைகள் மற்ற தென்னிந்திய நாடி நிலையங்களுக்கு மாறாக இருந்தன.

அருண்சம்ஹிதை : தரியாகனச் தில்லி : 30 வருடத்திற்கு முந்தைய ஒரு புத்தகத்திலிருந்த விலாசத்திற்கு போஸ்ட் மாஸ்டர் மூலமாக எழுதியிருந்தேன். பிறகு பண்டிட் ஜுகல் ஜோஷி பதில் எழுதி என்னை வருமாறு எழுதியிருந்தார். நான் அவருடைய வீட்டை அடைந்தபோது என்னை மிக்க அன்புடன் வரவேற்றார். நன்றாக அலங்கரிக்கப்பட்ட வரவேற்பறை, பழைய ஆனால் வலுவான மரச்சாமான்கள், கம்பியில்லாத டெலிபோன், சுழலும் நாற்காலியில் வீற்றிருந்த திரு. ஜுகல் பழைய விலாசத்தை வைத்துக்கொண்டு தன்னை தேடி வந்த என் முயற்சியை பாராட்டினார். நாடி ஜோதிட புத்தகம் அளித்ததை பெற்றுக்கொண்டார்.

வட இந்தியாவில் பழக்கமாயுள்ள நாடி இலக்கியப் பெயர்கள் மற்றும் இடங்களைப் பற்றி அவருக்குத் தெரிந்திருந்தது. ஆனாலும் கைகட்டைவிரல் ரேகையை வைத்துக்கொண்டு சோதிடம் பார்க்கும் முறை அவருக்கு தெரியாததாயிருந்தது. ப்ருகு, அருண், தூர்யநாடியின் மேன்மையைப்பற்றி அவர் கூறினார். ஆனால் இந்தக்காலத்தில் அவைகளை துஷ்பிரயோகம் செய்வது குறித்து மிகவும் கவலைப்பட்டார். போலி சோதிடம் குறித்து கோபமடைந்தார். யாராவது எழுந்திருந்து தன்னிடம் அசல் நாடி இருக்கிறது என்று சொன்னால் அது பொய் என்று அவர் சொல்வது சரியாக இருந்தது. ஏனென்றால் இரண்டாயிரம் மூவாயிரம் ரூபாய் வரை செலவழித்து நான் புத்தகவடிவில் பிரசுரிக்கப்பட்ட எல்லா நாடி சோதிடம் பற்றியும் படித்திருக்கிறேன். ரூபாய் கைக்கு கிடைக்கும் வரை வாடிக்கைக் காரர்களுக்கு புத்தக வியாபாரி அவர்கள் கையில் இந்த புத்தகங்களை கொடுப்பதில்லை. ஏனென்றால் தேவையற்ற பல விஷயங்கள் இதில் உள்ளதை ஒரு பார்வையிலேயே தெரிந்து கொண்டுவிடலாம். புததகத்தை வாங்குவதற்கு யோசிக்கக் கூடும்.

தன்னுடைய நாடி சாஸ்திரத்தின் பெருமையைக் கூறியபடி திரு. ஜுகல் சொன்னார். என்னுடைய தகப்பனார் சிறுவயதில் குளிர் காலத்தில் நாடி சோதிட ஓலைகளை கணப்புக்காக எரித்துக்கொண்டிருந்தார். அப்போது வந்த அவருடைய ஸமஸ்கிருத பண்டிதரின் பார்வை அதில் பட்டது. அதன் பிறகு தந்தைக்கு ஸமஸ்கிருதம் கற்றுக் கொடுத்தார். அதன் பிறகு அவர் பெயர் பெற்று நன்றாகவும் சம்பாதித்தார். எனக்கு ஸமஸ்கிருதத்தில் பரிச்சயமில்லாததால் படிப்பது கடினமாயுள்ளது என்றும் கூறினார். அருண் நாடியில் பெயர் கூறப்படுகிறதா என்று கேட்டதற்கு இல்லையென்றார். ஹோஷியார்பூர் ப்ருகு ஸம்ஹிதையில் பெயர் வருகிறது.

ஆகையால் அது உண்மையானது என்று ஜனங்கள் நம்புகிறார்கள். ஆனால் அது போலியானது. தென்னிந்தியாவில் நீங்கள் கூறும் நாடி சோதிடங்களும் பொய்யானவை. ஏனென்றால் உண்மையான நாடி என்னிடமுள்ளதுதான் என்று கூறினார். நான் தங்கள் நாடியைப்பற்றிச் சொல்லுங்கள். மற்ற நாடியைப்பற்றி அனுபவமில்லாமல் எதுவும் கூறுவதற்கு உங்களுக்கு அதிகாரமில்லை என்று சொன்னேன். நான் தென்னிந்திய மற்றும் பம்பாய், ஹோஷியார்பூர், மீரட் முதலிய நாடி நிலையங்களுக்குச் சென்றிருக்கிறீர்களா என்று கேட்டதற்கு எனக்கு அவைகளைப்பற்றி அறிய வேண்டிய அவசியமில்லை. ஜனங்கள் என்னிடம் அடிக்கடி சொல்கிறார்கள் அவையெல்லாம் பொய்யென்று. இருங்கள் நான் தங்களுக்கு ஹோஷியார்பூரிலிருந்து வந்துள்ள ப்ருகு சம்ஹிதையின் ஒரு ஓலையை காண்பிக்கிறேன். இவ்விதம் சொல்லி அவர் ஒரு போஸ்ட் கார்டை விட சிறிது பெரிதான வெண்ணிறமான ஒரு டிராயரிலிருந்து ஓலையை எடுத்தார். கையால் செய்யப்பட்ட காகிதம் போன்ற ஓலையில் ஒரு பக்கம் நபரின் ஜாதகமும், மற்ற பாகத்தில் தேவநாகரி எழுத்தில் அது காணப்பட்டது. நாடிக்கு ஹோஷியார்புர் "உண்மையான" திரு. ஜுகலுக்கு "போலியானது". அதில் ஒருபக்கம் தகப்பனார் பெயர் ராமபிரகாஷ் பெண்ணின் பெயர் திருப்தா என்று காணப்பட்டது. நான் அதிலுள்ள சிலவார்த்தைகளை கலியுகம், உயர்ந்த வேலை, பாரததேசம், ராஜ்ய யோகம், பிதாவின கிரகச்சேர்க்கை முதலிய வார்த்தைகளைப் படித்தவுடன் தாங்கள் நன்றாகப் படிக்கிறீர்கள் என்று சந்தோஷத்துடன் சொன்னார். பிறகு அவர் தன்னிடமுள்ள சில ஓலைகளை கொடுத்து போவதற்கு முன் அதனுடைய ஜெராக்ஸ் நகலையும் கொடுத்தார். அது எனக்கு உபயோகமாக இருந்தது. விடைபெறுவதற்கு முன் தங்களுடைய கட்டணம் என்ன என்று கேட்டதற்கு ரூ. 1100/- வாங்குகிறேன். ஆனால் வாடிக்கையாளர் பணக்காரராகத் தோன்றினால் அதிகம் வாங்குவதில் தயங்குவதில்லை. கல்கத்தாவிலிருந்து மார்வாடிகள் வரும்போது அவர்களிடமிருந்து நன்றாகக் கறந்துவிடுவேன். அவர் வீட்டிலிருந்து கிளம்பும் போது அந்த வார்த்தைகள் எனக்கு மிகவும் கசப்பாக இருந்தது. இந்த நாடியானது, நாடிவருபவர்களுக்காக ஏற்பட்டது. அதை அவர்களுக்கு அப்படியே உரைப்பதை பணத்தால் நிறை போடுவதா. இது எவ்விதம் சரியாகும். மேலும், புராதனமான மொழியில் எழுதப்பட்டதை சரிவர சொல்லத் தெரியாதவர்களின் அறியாமையால் இந்த நாடி கிரந்தங்களே போலியானது என்று ஒருவர் கருதினால் அதில் அதிசயமில்லை.

ஹோஷியார்புர் ப்ருகு சம்ஹிதை : நான் ஜலந்தரிலிருந்து

ஹோஷியா்புருக்கு பஸ்ஸில் செல்லு ம் வழியில் ஆதம்பூா் விமான நிலையம் வந்தது. இங்கு சில காலம் இருந்தேன். என்னுடைய மேலதிகாாி ஹோஷியா்புா் நாடி காண்பிக்க முயன்றாா். ஒரு தடவை என்னையும் சென்று பாா் என்று சொன்னாா். அப்போதே பாா்த்திருந்தால் வந்திருக்க தேவையில்லாமாலிருந்திருக்கலாம். ஆனால் எப்போது நமக்குத் தோன்றுகிறதோ அப்போதுதான் நாடி சோதிடமும் பாா்க்க நேரிடுகிறது என்பது உண்மை. பண்டிட் தேஸ்ராஜ் மூலம்தான் ஹோஷியா்புா் நாடி பிரபலமானது. அதற்குப் பிறகு அவருடைய குமாரா் வாடிக்கைக்காரா்களின் நலன் கருதி ஓலைச் சுவடிகளை ஒரே இடத்தில் பத்திரப்படுத்த முனைந்தாா். ஆகையால் எந்த சோதிடாிடம் சென்றாலும் ஒரே மாதிாியாக இருக்கும் என்று சொல்லப்பட்டது. ஆனால் ஒவ்வொருவரும் தங்களிடம் உள்ளதே சாியானது என்று சொல்வதில் போட்டியிடுகின்றனா். பண்டிட் ரதீஷ் மோகனின் வீட்டில் பொிய ஹாலில் பிருகு மகாிஷியின் போட்டோவைப் பாா்த்து நன்றியும், மாியாதையும் ஏற்படுகிறது. வெண்மையான மிருதுவான திண்டுகள், நறுமணமுள்ள பலவித வா்ணங்களிலான மாலைகள், மந்தமான அமைதியான ஒளிவிளக்குகள் மகிழ்ச்சியை யூட்டுகின்றன. ஆனந்த பிருகுவின் வீட்டில் திருமதி. ஸ்நேஹா காணப்படவில்லை. கடைசியில் திருமதி சதீஷ் வீட்டில் காணப்பட்டாா். இந்தியில் பஞ்சாபிகலப்பு பக்கத்தில் 22/25 வயதுடைய பையன். என்னுடைய புத்தகத்தை மிக்க மாியாதையுடன் வாங்கிக் கொண்டாா். நான் ஆராயிச்சிக்காக தங்களிடம் உள்ள சுவடிகளைப் பாா்க்க விரும்புகிறேன் என்று சொ ல் லி ய போ து, தூா்யாஸ்தமனத்திற்கு பிறகு தான் நாடி படிப்பதில்லை என்று சாக்கு போக்கு சொன்னாா். பிறகு நான் பண்டிட் ஜூகல்ஜியின் மூலம் கிடைத்த ஜெராக்ஸ் நகலை காண்பித்த போது இது தங்களுக்கு எப்படி கிடைத்தது, இது அசலா போலியா என்று விசாாித்தபோது அந்த பையன் அசல் போல் காணப்படுகிறது என்று சொன்னபோது அம்மையாா் கோபப்பட்டாா். சிறிது படித்துக்காட்டுங்கள் என்று சொல்லிய போது மறுபடியும் மாலை நேரமாகிவிட்டது என்று காரணம் சொல்லி பேச்சை மாற்றிவிட்டாா்.

அக்கம் பக்கத்திலுள்ள நாடி கேந்திரங்களில் ரூ.250/- கட்டணமும், ஒவ்வொரு பகுதிக்கும் ரூ.350/- வரை வாங்கும் காரணம் என்ன என்ற கேள்விக்கு ஒருவரும் விடையளிக்கவில்லை. பஸ்ஸில் உட்காா்ந்து கொண்டே நினைத்தேன் தனித்தனியாக கட்டணம் வாங்குவது. பத்து மணியிலிருந்து 5 மணி வரை 2 - 3 போ் மட்டும் வேலை செய்வது மற்றும் ஓலைகள் சம்பந்தமான ரகசியங்களை காரணம் காட்டுவது. இது சம்பந்தமான விஷயங்களில் நாடி சோதிடா்கள் கவனம் செலுத்துதல் நலம்.

மேரட்டிலிலுள்ள பண்டிட் ரமேஷிடம் பிருகு நாடியுள்ளது. காலஞ் சென்ற சிவகுமாா் தீக்ஷித்தின் குமாரா் அவா். வக்கீல் வேலையுடன் சோதிடம் சொல்வதில் மிக்க நேரம் கிடைப்பதில்லை. அவருடைய மேசையில் 82லிருந்து இன்று வரை உள்ள கேஸ்கட்டுகள் இருந்தன. மிகவும் இனிய சுபாவமுள்ளவா். பிருகு நாடி ஓலையை கையில் கொடுத்தாா். ஆனால் ஜெராக்ஸ் எடுத்துக் கொடுங்கள் என்று கேட்டபோது தெய்வீகமான ஓலையை ஜெராக்ஸ் எடுக்கக்கூடாது என்று சொல்லிவிட்டாா். ஒருக்கால் 1/2 மணி நேர பாிசயத்தில் கொடுக்க வேண்டாம் என்று நினைத்தாரோ அல்லது ஜெராக்ஸ் நகலை துஷ்பிரயோகம் செய்வேன் என்று கருதினாரோ, எவ்வளவு சொல்லியும் நகல் கொடுக்க மறுத்துவிட்டாா்.

தென்னிந்திய நாடி சோதிடத்தில் புதிய முறைகள் கையாளப்படுகின்றன. ஒலிநாடா, புத்தகம் கொடுக்கும் முறை உள்ளது. இவை வட இந்தியாவில் புதுமையாக இருக்கிறது. ரூ.100/- கட்டணம் வாங்குகிறாா்கள் என்று சொன்னால் தொழிலை மிக மலிவாக்குகிறாா்கள் என்று குறை கூறுகிறாா்கள். மேலும் அவை போலியானவை என்று கோபிக்கின்றனா். இவ்விதம் கட்டணம் குறைவாக வாங்கினால் எங்களிடம் யாா் வருவாா்கள் என்று சிலா் குறை கூறுகின்றனா். தென்னிந்தியாவில் தமிழ் மொழியில் எழுதப்பட்டிருக்கிற நாடி சோதிட அனுபவமில்லாமலேயே அதை தாங்கள் எப்படி போலி என்று சொல்கிறீா்கள் என்று கேட்டால், அசல் எங்களிடம் இருக்கும் போது மற்றவை போலி தானே என்ற அவா்களின் வாதம் விசித்திரமாக இருக்கிறது. தாங்கள் ரூ.1100/- கட்டணம் வாங்குவது தவறு என்று தொிகிறது. என்னுடைய ஜாதகத்தை வாங்கிக் கொண்டாா். என்னுடைய ஓலையைத் தேடித் தருவதாகவும் வாக்களித்தாா். ஆனால் 1982லிருந்து கவனிக்கப்படாத கேஸ்கள் இருக்கும் போது என்முறை எப்போது வருமோ?

இவா்களின் என்னுடையது தான் அசல் மற்றவை போலி என்று சொல்வதில் போட்டி, பொிய தொகை வாங்குவது, வேலை செய்வதில் தாமதம், இவற்றைக் காட்டிலும் தென்னிந்திய நாடி நிலையங்களில் காட்டும்மாியாதை மற்றும் நாணயம் போற்றத்தக்கது. மற்ற நாடிகளையும் மதித்தல், மற்றவைகளை போலி என்று சொல்லாமை, மற்ற மதத்தினாின் படங்களை நிலையங்களில் மாட்டியிருப்பது, நாடி முனிவா்களின் படங்கள், மற்ற நாடி சோதிடா்களைப் பற்றிய தகவல் கொடுப்பது போன்றவை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. மொழித்தடங்கலைத் தவிர மற்ற விஷயங்களில் தென்னிந்திய நாடி சோதிடம் மிகவும் பிரபலமாக வர நேரலாம்.

**ஆனாலும் தூரதா்ஷனின் "சுரபி" யில் நாடி சோதிடம் சம்பந்தமான நிகழ்ச்சி, NTV மூலம் ஜப்பானியா்களின் புகழ்ச்சி, மற்றும் என்னுடைய கட்டுரைகளின் மூலம் நாடி சோதிடம் பல ஜனங்களைக் கவா்ந்திருக்கிறது என்பது உண்மையல்லவா?**



# தற்சமயம் இந்தியாவிலுள்ள நாடி ஜோதிட நிலையங்களின் முகவரியும் மற்ற விவரங்களும்

தற்சமயம் இந்தியாவிலுள்ள நாடி ஜோதிட நிலையங்களின் முகவரியும் மற்ற விவரங்களும் வாசகர்களுக்காக கீழே கொடுக்கப்பட்டுள்ளது. இவற்றின் முகவரி, தொலைபேசி எண் மற்றும் கட்டணம் ஆகியவை மாறக்கூடியவை என்பதை வாசகர்கள் தயவு கூர்ந்து நினைவில் நிறுத்திக் கொள்ளவும். நாடி நிலையத்தை நேரில் அனுகுவதற்கு முன் தபால் மூலமாகவோ தொலைபேசி மூலமாகவோ தொடர்பு கொள்வது நல்லது.

| Sl. No. | Name of Nadishastry and Nadigranth | Address and Phone No. | Fees Charged and other misc. information |
|---|---|---|---|
| 1 | Dorai Subburathinam, Sri KOUSHIHAAGASTHIYA NADI | 36, New State Bank Colony West Tambaram, MADRAS 600 045, Behind Philips Hospital. (Monday Closed) Tele : 2366264 | Rs. 100 + Rs.25 (For Tape) for each Kandam.Thumb impression and horoscope required. Time : 9 A.M. to 10 P.M. |
| 2 | A. KARUNAKARAN SUGARNADI & Other Nadis Such as BUDH, SHIV-NADI, ETC. | 14, Mannar Street, T. Nagar, Madras - 17. Near Bus Terminal of T. Nagar, Tele.: 4348094. (NO HOLIDAY) | Same as S.No.1 |
| 3 | Ramani Guruji KAKBHUJANDHAR NADI | 18, Alamelupuram, East Tambaram, Selaiyur, Madras - 600 073. (In front of Bharat Engineering College) Tele : 2375:95 | No fees. Free. Questions are answered by throwing cowries : Morning & Evening 7 to 9. May carry Flowers and Fruits |
| 4 | D. Balasubramaniam AGASHIYA NADI | 189, Periyar Nagar, Chinna Kanchipuram, Chengalpattu Road, Tele : 0412 / 24283 KANCHIPURAM - 631 503. (Tuesday Closed) | Fees same as S.No.1 |
| 5 | K. Aravindha Samy VASHISTHAR NADI | 5/66, Bhajan Koil Street PALLAVARAM Madras - 600 043. | Same as S.No.1 |
| 6 | S. Kumar SUKAR MARKANDEYA | 129, Valluvar Kottam High Road, Nungambakkam, Madras - 600 034. Tuesday - Holiday Tele : 8258803 | No specific fees. Time : Sunday Morning 8 to 11 Other days 5 to 8 p.m. Speciality - Reads from Blank Paper |
| | Preferably visit if your Sun sign Vrishbh & Mithum on Monday, Masha & Karkatak - Wed, Simha & Dhanusu - Thurs, Tula & Kanya - Fri, Meena & Makaram - Saturday. You may refer, Medical problem to Siddha treatment also on any day. | | |
| 7 | C.P. Jayashankar AGASTHIYA NADI | 101, Ganapathy Nagar, TIRUVANAI KOIL, TRICHY - 620 005. Tele : 62190 | Same as S.No.1 |
| 8. | C.P. Jayashankar Agasthiya Nadi | Hotel Vigilants 27, Palmariya mavata Kollipatti, Colombo. Tel : 582929 | |
| 9 | S. Manivasakan AGASTHIYA NADI | Bannerghatta Road, Bhavani Nagar 2nd Cross D.R.C. (Post), Bangalore - 560 029. (B'lorc Dairy Circle Stop) Bus from Majestic 356 & 365 & from Shivajinagar, 161 D, 368. | Same as S.No.1 |
| 10 | Mr. Karunakaran SUGAR NADI, Branch of T.Nagar, Madras 17. | 74, Satti Cross Road, No.1, Gandhi Puram, COIMBATORE - 12. | Same as S.No.2 |

| Sl. No. | Name of Nadishastry and Nadigranth | Address and Phone No. | Fees Charged and other misc. information |
|---|---|---|---|
| 11. | Prof. A.N.K. Swami<br>MEENAKSHI NADI | 83, Kutchery Road,<br>Madras - 600 004. Tel : 4940580 | Fees Rs.500/- Name does not come. English Translator available. |
| 12. | Mr. Anbazhagan<br>Maha Siva Vakkiya Nadi | 46, Palayakkaran Street,<br>B Block, Flat No. 9, II Floor,<br>Kodambakkam, Madras - 24. | Same as S.No.1 |
| 13. | Dr. Om Ulaganathan<br>Errattai Nadi | 30, Municipal High School Road,<br>Kurangul Kuttai, Erode - 3.<br>Tele : 210999 / 211545 (Only on Saturdays & Sundays) | Minimum Rs. 1000. No English Translator Nadi Shastri often busy with Politiciens and wealthy persons. |
| 14. | Sri Av. Dharani Balan<br>Agasthiya Nadi | 81, Vayaloor Road, Trichy - 17<br>Opposite to Kumaran Nagar<br>Bus Stop Tele : 29343 | Same as S.No.1 Not met, compiled information. |
| 15. | Mohana Sundaram<br>Agasthiya Nadi | 19, New Bunglow Street,<br>Chintadripet, Madras - 600 012.<br>Tele : 845961 | No English. No Tape or Note Book, Time 10 to 6. Horoscope based. |
| 16. | Mrs. Satish Janardhan Dev<br>Bhrugu Samhita | 68, Rail Mandi, Hoshiyarpur<br>(Punjab), Tele : 01822 - 22025 | Names mentioned No Tape No Note Book Fees Rs.500 Time : 10 to 6 Horoscope based. |
| 17. | Mrs. Sneh Amrit Anand<br>Bhrugu Samhita | Ram Bagh, Sundar Sadan Rail Mandi<br>Hoshiyarpur (Punjab) Tel : 22122 | Names mentioned No Tape No Note Book. Fees Rs.500 Time : 10 to 6 Horoscope based. |
| 18. | Mr. Ratish Mohan<br>Bhrugu Samhita | Ram Bagh, Rail Mandi, Hoshiyarpur<br>(Punjab) | Names mentioned No Tape No Note Book. Fees Rs.500 Time : 10 to 6 Horoscope based. |
| 19. | Harshad Bhai Acharya<br>Surya Samhita<br>S/o. Babu Bhai<br>Chhaya Shasthri | 418, Rawal Building (Near YMCA<br>Building) 2nd Floor<br>Dr. Bhadkamkar (Lamington)<br>Road, Bombay - 400 004<br>Tele : 3821916, 3826988 | Fees Rs. 500/- Same as above |
| 20. | Yogesh Bhai Acharya<br>SURYA SAMHITA<br>CHHAYA SHASTHRI | Neelgagan Housing Society<br>8th Lane, 3rd Floor<br>Diwali Bagh, Opposite<br>Vanita Wishram, SURAT-395001<br>Tele : 648813 | Same as above |
| 21. | Pt. Dr. Rashmikant<br>Vyas S/o. Late Suryanarayan | Bharati Bhavan, Mahakal<br>Ujjain, M.P. | Rs. 551/- or Rs. 1111/-<br>Depending on work |
| 22. | Pt. Jugal Joshi<br>ARUNA SAMHITA<br>S/o, Late. Haveli Ram | 3/4313, Ansari Road,<br>Dariya Ganj, Delhi - 110 002<br>Tele : 3272286, 3269431 | Fees Rs. 1100/-<br>Names not mentioned. |
| 23. | Pt. Ramesh Kumar<br>Dixit<br>Bhrugu Samhita<br>S/o. Late Shiv Kumar | 447, Budhana Gate<br>Opposite Hunuman Temple Meerat.<br>Tele : 515238 | Fees Rs. 1100/-<br>Names mentioned |
| 24. | Sri Shuka Nadi<br>Gunjur Sachidanand<br>Murthy | "Nadi Gruha", No. 33, 5th Main<br>Road, Chamarajapet,<br>Bangalore 18. Tele : 6601971 | Fees not fixed. |
| 25. | Mr. N. Sakthivel<br>Sri Akatthiar Nadi<br>Jothida Nilayam | 417, 6th Street (Extn.)<br>100 Feet Rd, Gandhi Puram<br>Coimbatore - 641 012.<br>Tele : 436 824 | Fees Rs. 100. |

| Sl. No. | Name of Nadishastry and Nadigranth | Address and Phone No. | Fees Charged and other misc. information |
|---|---|---|---|
| 26. | Velmurugan<br>Vashishithar Nadi | 9, Subbu Pillai St, Near Samson Hotel<br>Pollachi - Coimbatore | Same as SL No.1 |
| 27. | K. Mathiazhagan<br>Agasthiya Nadi | 57, Brindavan Road,<br>Parlands Murugan Koil Street,<br>Salem 636 016. | Same as S.No. 1 |
| 28. | Poosai Muthu<br>Vasishtha Nadi | Vasishtha Nadi Nilayam<br>by the side of Vaidiswaran Koil.<br>Pin - 609 117. | Ist Chap. Rs. 200 + Tapc + Trans Rs.25<br>Special Kandam Rs. 350 to 1000 |
| 29. | V S A Sami Sachida Nantham<br>Agasthiya Nadi | Sri Luxmi Dharma Illam<br>18, Jotida Salai<br>Vaitiswaran Koil - 609 117 | Same as No. 1 |
| 30. | Gemini V. Selvaraju<br>Sri Kak Bujandar Nadi | 15/A, Kotha Street 1st Floor of Tele.<br>Exchange, Vaidhiswaran Koil 609 117 | 1st Chapter 100 + Tapc Rs.25 no English<br>Trans. |
| 31. | S. Thanikachalam<br>Sri Sabtharizhi Nadi | 9, Milladi Street, Vaithiswaran Koil<br>609 117. | Same as S. No. 30 |
| 32. | S. Thanikachalam<br>Agasthya Nadi | 85, Cutchery Stree<br>Near Periar Hall, Erode 638 001<br>Tel : 77463 | Same as S. No. 30 |
| 33. | S. Dhaivakantan<br>Agasthya Nadi | Mambala Salai<br>Srirangam, Trichy. Tel : 433169 | Same as S.No. 30 |
| 34. | T. Govindraju<br>Sri Shiva Vakkiya | 2, Sanbakavalli<br>Near Dr. Ponpathy House<br>Vaitheeswaran Koil 609 117 | Fees Gen. Kandam Rs. 150 + Tapc +30<br>Trans Spl. 200 |
| 35. | S. Sundara Moorthy<br>Kaushika Thulaai | 22, Milladi Street<br>Vaidheewaran Koil<br>Pin - 609 117. | General Chaptor<br>Rs. 75+Tapc |
| 36. | Dr. C. Ravi<br>Sri Bhokar<br>Vashishthar Nadi | Swami Sannathi Street<br>Vaidheeswaran Koil 609 117<br>Tel : 04363 / 79302 | Same as no. 30 |
| 37. | S. Srinivasan<br>Sri Agasthya Nadi | 2, South Madavilagam<br>Vaidheeswaran Koil<br>Pin - 609 117 | Same as S. No. 30 |
| 38. | VS. Samy Sadhasivan<br>Kaushiha Agasthya | Veda Bhavan<br>17 A Milladi Street<br>Vaidheeswaran Koil | Same as S. No. 30 |
| 39. | S. Venkateshan<br>Sri Agasthya Maha<br>Shiva Nadi | 11/A, Kemarnt Street<br>Vaidheeswaran Koil<br>Pin - 609 117. | Same as S. No. 30 |

# நாடி சோதிட புனித ஆலயம்

## (வைத்தீஸ்வரன் கோயில்)

வைத்தீஸ்வரன் கோயில் ஒரு சிற்றூர். புராதனமான சிவன் கோயில் (வைத்தீஸ்வரன் கோயில்) முக்கியமானதாக இருந்தது! கோயிலில் செவ்வாய் கிரகத்திற்கும் ஒரு சிறிய கோயில் இருக்கிறது. புராதன காலத்திலிருந்தே இந்த கோயிலும், சுற்றியுள்ள இடங்களும் நாடி கிரந்தங்களை இயற்றவும், அவைகளை பாதுகாக்கும் இடங்களாகவும் இருந்தன. இதன் காரணமாக இந்த ஊர் நாடி சோதிடம் பொறுத்தவரை ஒரு முக்கியமான, மகத்தான இடம் பெற்றிருக்கிறது. கோயிலுக்கு வெளியே பல நாடி நிலையங்கள் காணப்படுகின்றன. சிறிய அறைகளுள்ள வீடுகளிலிருந்து பெரிய இரண்டுமாடி கட்டிடங்களில் இருக்கும் இந்த நாடி நிலையங்களுக்கு ஜனங்கள் வந்த வண்ணமிருக்கின்றனர். சென்னையிலிருந்து அங்கு செல்வது சற்று கடினம்தான். பஸ் மூலம் பாண்டிச்சேரி - சிதம்பரம், அங்கிருந்து மயிலாடுதுறை மார்க்கத்தில் 17-18 கி.மீ. தூரத்தில் இருக்கும் இந்த கிராமம் ரயிலாலும் இணைக்கப்பட்டுள்ளது.

சிறிது தினங்களுக்குமுன் நவம்பர் 95ல் நான் அங்கு சென்றிருந்தேன். அங்கு எனக்கு ஏற்பட்ட அனுபவங்களை உங்களோடு பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன்.

**அகஸ்திய நாடி - திரு. சாமிசதாசிவம்:** தாம்பரம் நாடி நிலைய திரு. துரை சுப்புரத்தினத்தின் உறவினர் சாமி சதாசிவம் இந்த நிலையத்தை நடத்துகிறார். "வேதபவன்" என்று பெயருள்ள நல்ல அழகிய வீடு. அதன் உள்ளே நல்ல வசதிகளுடன் கூடிய அலுவலகம். அவரை நான் முன்பே அறிவேன். மிக்க அன்புடன் என்னை வரவேற்றார். சாமி சதாசிவம் நல்ல அறிவாளி. நாடி சோதிட வல்லுனர். சாந்தி தீக்ஷையில் சொல்லப்பட்டிருக்கும் பரிகாரங்களிலும் வல்லுனர். இந்த நிலையத்திற்கு இதர நாடுகளிலிருந்தும் தங்கள் வருங்காலத்தை அறிய வருகின்றனர். இந்த (தமிழாக்க) புத்தகத்தை, வைத்தீஸ்வரன் கோயிலில் விநியோகிக்கவும் இசைந்துள்ளார்.

**திரு. வசிஷ்ட நாடி கேந்திரம் திரு. பூசை முத்து** பார்ப்பதற்கு எளிமையாக காணப்படும் இவர் ஒரு சிறந்த வித்துவான். பிரச்ன கண்டத்தில், நாடி சோதிட வரலாறு சம்பந்தமான எனக்கு ஏற்பட்ட பல ஐயப்பாடுகளை தீர்த்துள்ளார். அவருடைய கூற்றுப்படி நாடி சோதிடம் 5000 வருடங்களுக்கு முற்பட்டது. புராண காலத்து, வியாஸர், பராசரர் முதலியோருக்கு முன்னாலேயே, வசிஷ்டர் மேலும் மற்ற முனிவர்கள், நாடி இலக்கியங்களை இயற்றியுள்ளார். அவருடைய நாடி நிலையம் ஒரு பெரிய கட்டிடத்தில் உள்ளது. பல அறைகளில் பல நாடி சோதிடர்கள் ஆருடம் சொல்லிய வண்ணமிருந்தனர். இங்கு பேராசிரியர். நடராஜன் என்பவரோடு பரிச்சயமேற்பட்டது. இவர் ஆங்கில மொழிபெயர்ப்பில் வல்லுனர். அவருடைய ஆங்கில, தமிழ்புலமை பாராட்டதகுந்தது. இங்கு முதன்முதலாக நாடி சம்பந்தமான ஒரு நூலகம் இருப்பதைப் பார்த்தேன். மற்ற நாடி நிலையங்களில் சுவடிகள் பூட்டப்பட்ட அறைகளில் மர்மமாக வைக்கப்பட்டிருக்கும். மைக்ரோபிலிம் மூலம், கார்பன் பரீட்சை முதலிய நவீன சாதனங்கள் மூலம் நாடி சோதிடத்தின் கால நிர்ணயம் செய்வது மூலம், இந்த இலக்கியத்தை ஒரு மதசம்பந்தமான சூழ்நிலையிலிருந்து வெளிக்கொணருவதை ஆதரிக்கிறார். இந்த நிலையத்தினுள் ஒரு வசிஷ்ட நாடி சோதிடர் திரு. மோகன் இயற்றிய ஞான காண்டம் சம்பந்தமான விளக்கக் கையேடு பிரசித்தமானவை.

**ஸ்ரீ காகபுஜண்டர் (ப்ருஷண்ட) நாடி நிலையம் திரு. செல்வராஜ்.** இவர் தன்னிடமுள்ள நாடி ஓலைகளை என்னிடம் காண்பித்தார். எனக்கு நிறுத்தி, நிறுத்தி சொல்லி அவைகளை விளக்கினார். அதில் ஜாதகர்களின் பெயர் முதலியன எப்படி வருகின்றன என்பதையும் விளக்கினார். தாம்பரத்தில் ரமணி குருஜியிடம் உள்ளது ஜீவ நாடி என்னிடம் உள்ளது ஓலைச்சுவடிகள் வடிவத்திலுள்ளது என்று சொன்னார்.

**ஸ்ரீ சப்தரிஷி நாடி : திரு. தணிகாசலம்** இதை நடததுகிறார். அவரும் தன்னிடமுள்ள ஓலைச்சுவடிகளை என்னிடம் கொடுத்து அவைகளை விளக்கவும் செய்தார். ஈரோடு, திருச்சியில் இருக்கும் நாடி நிலையங்களிலுள்ள ஓலைச்சுவடிகளையும் காட்டினார்.

**ஸ்ரீ போகர் வசிஷ்ட நாடி : டாக்டர். சி.வி. ரவியை** சந்திக்க முடியவில்லை. ஆனாலும் அவர் டாக்டர் பட்டம் பெற்றுள்ள படத்தை பார்த்தும் நாடி சோதிடம் பார்ப்பவர்களின் எண்ணிக் கையிலிருந்தும் இந்த நிலையத்தின் மேன்மை புலப்படுகிறது.

**ஸ்ரீ அகஸ்திய நாடி நிலையம் - திரு. ஸ்வாமி சச்சிதானந்தம்** இவரையும் சந்திக்க முடியவில்லை. ஆனாலும் நாடி சோதிடம் சொல்பவர்களின் எண்ணிக்கையிலிருந்து இதுவும் ஒரு பிரதான நிலையம் என்று தெரிகிறது.

**கௌசிக துல்லிய நாடி - திரு சுந்தரமூர்த்தி.** இவரை இரவு 10 மணிக்கு பிறகு சந்தித்தேன். அப்படியும் கூட மிக்க அன்புடன் வரவேற்றார். தன்னுடைய நாடியின் மேன்மையைப்பற்றி கூறினார். நல்ல மொழி பெயர்ப்பாளரின்மையால் நான் அதை முழுவதுமாக புரிந்து கொள்ள முடியவில்லை. இதிலும் மக்கள் அதிகம் வருகிறார்கள்.

**ஸ்ரீ சிவநாடி - திரு. கோவிந்தராசன்.** சிறிய அறையில் இருந்தும் கூட இந்த நிலையமும் பிரசித்தி பெற்றது.

**அகத்தியர் நாடி - திரு. வேங்கடேசன் சீனுவாசன்** முதலிய இளைஞர்களும் நாடி சோதிடம் சொல்லி வருகின்றனர். மற்ற இடங்களிலிருந்து, இங்கு அதிகம் கும்பலில்லாததால், அவசரமாக பார்ப்பவர்கள் இவர்களை நாடுகிறார்கள்.

நான் இதுவரை இந்தியாவில் பல இடங்களிலுள்ள பிரபல நாடி சோதிட நிலையங்களுக்கு சென்று வந்திருக்கிறேன். தென்னிந்திய நாடி சோதிட நிலையங்களில் உள்ள சூழ்நிலை, மற்ற நிலையங்களைவிட மிக எளிமையாகவும், அன்பானதாகவும் இருக்கிறது. மொழி மூலம் ஏற்படும் இடையூறுகளையும்

சமாளிக்கிறார்கள். வட இந்தியாவில் காணப்படும் என் நாடி சோதிடம்தான் அசல் மற்றவை போலி என்று சொல்லப்படும் போட்டி மனப்பான்மை இங்கு காணப்படவில்லை. இதர நாடி முனிவர்களின், இதர மதத்தினரின் உருவப்படங்கள், மற்ற நாடி சோதிடர்களைப் பற்றியும் சொல்லும் மனப்பான்மை. இவை என்னை மிகவும் கவர்ந்தன. நாடி சோதிடத்தை ஒரு பணம் ஈட்டும் சாதனமாக கருதாமல், தங்களுடைய முன்னோர்களால் தங்களிடம் கிடைத்த இந்த சொத்தை, தகுதிவாய்ந்தவர்களிடம் ஒப்படைக்கவும் தயாராக உள்ளனர். நாடி சோதிடத்திலுள்ளதும், இல்லாததுமான செலவு மிகுந்த உபாயங்களை சொல்லி பணம் பிடுங்கும் போக்கு இவர்களிடம் காணப்படவில்லை.

தென்னிந்திய மற்றும் வட இந்திய நாடி நிலையங்களில் என்னை மிகவும் கவர்ந்தது என்னை உற்சாகப்படுத்தியது தான். அவர்கள், என்னைப்போன்ற கற்ற உயர்ந்த மேலும் விமானப்படையிலுள்ள, சற்றும் சம்பந்தமில்லாத துறையிலுள்ள தமிழ், வடமொழி புலமையில்லாத ஒரு நபர், எல்லா நாடி சோதிட நிலையங்களும் சென்று வந்த அனுபவங்களை, அடைவது என்பது முற்றிலும் ஆச்சரியகரமானது என்று சொல்கிறார்கள். இந்த அனுபவங்களை தாங்கள் புத்தகம் மூலம் வெளியிட முன்வந்துள்ள தங்கள் ஆர்வம் பாராட்டத்தகுந்தது. இதுவரை தமிழ் நாட்டிலும்,மற்றும் நாட்டின் பிற பகுதியில் உள்ள நாடி சோதிட நிலையங்களின் விவரங்களை , இதுவரை எவரும் விளக்கவில்லை. நாங்கள் எங்களிடம் உள்ள நாடி சோதிடத்தின் மகிமையைச் சொல்கிறோம். தற்பெருமையாலல்ல. பிறர் இவ்விதம் சொல்கிறார்கள். தங்களின் நடுநிலையான விமர்சனம் நாடி சோதிடம் பற்றிய உண்மையான நிலையை இதன் மேன்மையை மக்கள் உணருவதில் உதவியாக இருக்கும். தாங்கள் அவசியம் தமிழ் மற்றும் இதர மொழிகளில் புத்தகங்கள் அவசியம் வெளியிட வேண்டும். தங்கள் புத்தகங்களை எதிர்பார்க்கிறோம். அவைகளை வெளியிடுவதிலும் உதவுகிறோம் என்று சொல்கிறார்கள். ★


*With Best Compliments From*



**ALAMBRA DYE CHEM**



**D. RAMAKRISHNAN**
PROPRIETOR



2, AGARAM ROAD,
TAMBARAM EAST,
MADRAS - 600 059.
PHONE : 237 52 99





*With Best Compliments From*

**VENKATESAN & SONS**
( N.D.T. Engineers )

**C.V. Amarnath**

Ultrasonic, Radiography,
Magnetic Particle Test,
Site Dynamic Balancing

No.19, 22nd Street,
T.G. Nagar,
Madras - 600 061.
✆ 2341344, 2331397






WITH BEST COMPLIMENTS FROM

*Ashok Kumbhat*

**K LITE INDUSTRIES**

***WHEN YOU BUY K LITE YOU BUY THE BEST***

D-10 INDUSTRIAL ESTATE
AMBATTUR
MADRAS - 600 058.




AND
HOUSE OF KUMBHATS

# அன்னம்மாளின் அனுபவங்கள்

தாம்பரம் விமானப்படை நிலையத்திற்குள் எங்களுடைய பங்களாவிற்கு முன் ஒரு விமானப்படை அதிகாரி விங் கமாண்டரின் இல்லம் இருக்கிறது. அந்த விமானப்படை அதிகாரியின் மனைவி அன்னா என்றழைக் கப்படும் அன்னம்மாள் (வாசகர்களின் நலனுக்கு இப் பெயர் கொடுத்துள்ளோம்) ஊக்கமும் உற்சாகமும் நிறைந்தவர். சமையற்கலை யில வல்லவர். அவருடைய நடையுடை பாவனைகள் மனம் க வ ர க் கூ டி ய வை. கணிப்பொறியியலில் பாண்டித் தியமும், ஆங்கிலம், இந்தி, பஞ்சாபி மொழிகளில் புலமை பெற்றவர். பஞ்சாபி இன விருந்தோம்பல் குணமும், இனிமையாகப் பேசவும் கூடியவர். குடும்பத்தாரின் எதிர்ப்புக்கிடையை, தென்னிந்திய, கேரள நாட்டு இளம் அதிகாரியை மணந்தவர். பிறந்த வீடு, புகுந்த வீடு இருபக்கமும் நல்ல வசதி படைத்தவர். இவருடைய குழந்தைகளும் அறிவாளிகள். ஆனாலும் இவருக்கு அவர்களுடைய வீட்டு வேலைகளிலும் மற்ற வேலைகளிலும் ஈடுபாடு சிறிது குறைவு. வீட்டில் பலதரப்பட்ட வாகனங்கள். இவைகளில் ஏதாவது ஒன்றில் செல்லும் அவரை பரிகாசமாக "பறக்கும் தேவதை" (Lady on wheels) என்று சொல்லும் போது மகிழ்ச்சியுடன் புன்முறுவலிப்பார்.

அன்னம்மாளைப் பற்றி நான் இவ்வளவு தூரம் சொல்லக் காரணம் வாசகர்களின் மனதில் அவருடைய குணாதிசயங் களைப் பதிய வைப்பதுதான். சோதிடம் முதலியவற்றில் இவருடைய கணவரின் குடும்பத்தார் நம்பிக்கை உள்ளவர்கள். அவர்கள் சென்னையில் பல வருடங்களாக நிரந்தரமாக தங்கியுள்ளனர். வீட்டிலுள்ளோர், மற்றும் உறவினர்களின் வருங் காலத்தை அறிவதற்காக, ஏற்பாடுகள் நடந்தன. நாடி சோதிடத்தை நாடி வருபவர்கள் சென்னையில் இவர்கள் வீட்டில் தான் தங்குவார்கள். அவர்களைப் பார்த்து அன்னம்மாளின் மனதிலும் இதைப்பற்றி அறியும் ஆவல் ஏற்பட்டது. பிறகு.

அன்னம்மாள் நாடி சோதிட நிலையத்தை சென்ற டைந்தார். 2,3 மணி நேரம் காத்திருந்ததற்குப் பிறகு அவரிடம் தங்களுடைய ஓலை இல்லை என்று சொல்லப்பட்டது. அன்னம்மாள் நம்பிக்கை யிழந்து பலவிதமாக எண்ணத் தொடங்கிவிட்டார். "உன் என்னுடைய மனைவியிடம், "உன கணவரிடம் சொல் நான் அவரிடம் சண்டை போடப் போகிறேன் என்று சொல்லியனுப்பினார். ஓடி விடாதே என்று சொல். அவருடைய நாடி சோதிடம் எல்லாம் வெறும் பிதற்றல் என்று சொல்".

நானும் அன்னம்மாளும் பல விஷயங்களை தர்க்கிப்பதை என்னுடைய மகள் ஸ்நேஹா அறிந்திருந்தாள். ஆகையால் அவள் கவலையோடு இன்று அன்னம்மாளோடு மறுபடியும் சண்டை நிகழப் போகிறது என்று சொல்ல ஆரம்பித்தாள். இன்று அவர் இருக்கும் நிலையில் தாங்கள் இன்று நிச்சயம் தோற்கப் போகிறீர்கள். எனது மனைவியோ ஒரு தடவை அந்தப் பக்கமும் மறுதடவை இந்தப் பக்கமும் பேசுவாள். அவளுக்கு அன்னம்மாளின் கேள்விக் கான பதில் அவள் கணவனிடம் உள்ளது என்று தெரியும். ஆனால் மனதில் அதுவும் நல்லது தான். இன்று நமது கணவர் நாடி சோதிடம் போன்றவற்றில் தன் நேரத்தை வீணடிக் கிறார். இன்று அவர் வகையாக மாட்டிக் கொண்டார் என்று.

மாலை சபை கூடிற்று. சூடான தேத் தண்ணீரை உறிஞ்சிக் கொண்டு அன்னம்மாளின் தாக்குதல் ஆரம்பமாயிற்று. "சகோதரா, எனக்கு இவையெல்லாம் வெறும் பிதற்றல் என்று தோன்றுகிறது. இதைப் பார்க்கப் போகிறவர்கள் பைத்தியங்கள். இந்த சோதிடம் சொல்பவர்கள் முட்டாள்கள். இந்தத் தாக்குதலுக்கு நான் ஈடு கொடுக்க வேண்டியதாயிற்று.

நான் சிரித்துக் கொண்டே சொன்னேன் : நீங்கள் சொல்வது சரிதான். சோதிடம் பார்க்கச் செல்பவர்கள் பைத்தியங்கள் தான். ஏனென்றால் சோதிடர்கள் அவர்களை பைத்தியமாக்க முயலு கிறார்கள்.

நடைபாதைகளில், திருவிழாக் காலங்களில் கை ரேகையை பார்த்து சோதிடம் சொல்லும் அநேகர் இருக் கின்றனர். குறி சொல்வதும், தாயத்துக்கள் செய்து விற்றலும், பலவிதமான வண்ணக் கற்களான மோதிரங்கள் அணிவதன் மூலம், ஜனங்களுக்கு ஏற்படும் துக்கங்களையும், விபத்துக்களையும் போக்க கடிக்கும் உபாயங்களைச் சொல்வதும், அவர்கள் தங்கள் வாழ்க்கை சாதனங் களாகும். ஆனால் இவர்கள் தங்கள் வ ா ழ க் கை ை ய யு ம , வருங்காலத்தையும் ஏன் நன்றாக அமைக்க முடிவ தில்லை. கோடீஸ்வரனாவது எப்படி என்ற புத்தகத்தை எழுதுபவன் ஏன் ஏழையாய் இருக்கிறான்? அப்படி இருந்த போதிலும் இம்மாதிரி யான புத்தகங்கள் ஆயிரக் கணக்கில் விற்கப்படுகின்றன. ஜனங்கள் பத்திரிக்கைகளிலும், புத்தகங் களிலும் தங்கள் ராசி பலன்களை ஏன் பார்க்கிறார்கள்? ஒருக்கால் இம்மாதிரி பார்ப்பவர்களும், இம்மாதிரி ராசி பலன்களை எழுதுபவர்களும் பைத்தியங்களா. மர்மங்கள் நிறைந்த ஒரு பேசும் படத்தில், முதலிலேயே கொலைகாரன் யார் என்று தெரிந்து விட்டால், பின்னால் வரும் காட்சிகளைப் பார்ப்பதிலான ஆவலும், ரசனையும் குன்றிவிடும். அம்மாதிரியே நாளை நடப்பதை இன்றே அறிந்து விட்டால் வாழ்க்கை இன்ப மற்றதாகும். நாளை நடக்கப் போவதை அறிந்து ஒரு பயம் தோன்றும். நாளை நல்லது தான் நடக்கும் என்பதை அறிந்தால், நாம் ஏன் அப்போது கஷ்டப்பட வேண்டும் என்று தோன்றும்.

"அன்னம்மா, மராட்டி ராஜ்ய நாடகப் போட்டியில் ஒரு நாடகத்தை இயற்றினேன். அதன்

நாடகாசிரியா எஸ்.என்.நவரே. அதில நான கதாயகனாகவும நடிததுளளேன. அநத நாடகததின மையக கருத்து சோதிடம பாாககும ஆவலில் கதாநாயகனுக்கு ஏறபடும் அவல நிலை. "சோதிடம் போன்றவற்றில் நமபிக்கை வைத்து அதனுடைய அடிமை ஆகாதே" செயல் ஒன்றே உன்னுடைய வருங் காலத்தை பிரகாச மாக்கும்". நாடகத்தின் மூலம் இக் கருத்து வலியுறுத்தப்பட்டது.

சோதிடத்தில் சொல்லப் பட்டது போன்றே கதா நாயகனின் வாழ்க்கை அமைகிறது. சோதிடத்தில் அதிக நம்பிக்கை காரணமாக கதாநாயகன் எதற்கும் உதவாத உதவாக்கரையா கிறான். இதைக் கேட்டு அன்னம்மாளின் முகம் மலர்ந்தது. அவர் தன்னுடைய கருத்தையே நானும் வெளிப்படுத்துவதாக நினைத்தார். ஆனால் நானோ நாணயத்தின் இரு பக்கங்களையும் பார்க்க வேண்டியதாயிருந்தது. நான் சொல்வதை தொடர்ந்தேன். நாடகாசிரியன் கதாநாயகனின் வருங்காலத்தை கதாநாயகன் சொல்வது போல் அமைக்கிறான். நாடகத்தின் மையக் கருத்தும் அதுதான். ஆனால் என்னுடைய கருத்து ஏன் அது அப்படியே நடக்கிறது. இதை எழுதுபவன் யார்? அவனுடைய தகுதி என்ன? வருங்காலத்தை (சோதிடம்) பற்றி எழுதுவதில் அவனுடைய லட்சியம் யாது? இந்த விஷயத்தில் தான் என்னுடைய கவனம் ஈடுபடுகிறது.

எவனொருவன் சோதிடத்தின் மூலம் தனக்கு நிகழப் போகும் நல்ல, கெட்ட சம்பவங்களைப் பற்றியே இரவு பகலாக கவலைப் படுகிறானோ, அவன் சோதிடம் பார்க்கத் தகுதியற்றவன். ஆனால் சோதிடம் என்பது என்ன? இதை எழுவதன் ரகசியம் யாது? இதைப் பற்றிய ஆராய்ச்சி செய்தல், மனிதனுக்கு இந்தக் கலையின் மூலம் என்ன உப யோகம், இதைப் பற்றி ஆராய்ச்சி செய்வது முற்றிலும் வேறு விஷயம். யார் சோதிடக்கலையின் மூலம் நடப்பதை அறிந்து கவலைப்படுகிறானோ, அவனைப் பற்றிய ஆருடம் சொல்லாமல் இருப்பதினால், நாடி சோதிடர் அவனுககு நனமையே செயகிறாா.

அன்னம்மாளின தாக்கம் வேறு மாதிரி மாறியது. சகோதரா, அதைவிடு, நாடி சோதிடாகள் நேரத்தின் மகிமையை உணர்வதில்லை. என்னை 3 மணிக்கு வரச் சொன்னார்கள். 5 மணி வரை உட்காாந்திருந்தேன். காபி சாப்பிட்டீர்களா என்று கூட கேட்கவில்லை. தன்னுடைய நேரம் மட்டுமல்லாமல் மற்றவர்களுடைய நேரத்தைப் பற்றியாவது அவர்கள் நினைக்க வேண்டும். நான் என்னுடைய மாதர் சங்க கூட்ட பார்ட்டியையும் விட்டு அங்கு சென்றேன்.

நான் பதில் சொன்னேன்:- நீங்கள் முதல் தடவையாக அங்கு சென்றீர்கள். ஆகையால் இம்மாதிரி உங்களுக்கு தோனறலாம். ஆனால் நாடி சோதிடத்தின் முக்கியமான பகுதி கட்டைவிரல் ரேகை அடையாளத்தை வைத்துக் கொண்டு, ஆயிரக்கணக்கான சுவடிகளில், தாங்கள் சம்பந்தப்பட்ட ஓலையை தேடி எடுத்தலாகும். அது மிக்க கடினமான காரியம். இதில் எவ்வளவு நேரம் ஆகும் என்று யாரும் சொல்ல முடியாது. சிலரது ஐந்தே நிமிடங்களில் கிடைக்கலாம். சிலரது கிடைப்பதில் பல மணி நேரமாகலாம். எவ்வளவும் நேரம் ஆகும் என்று யாரும் கணக்கிட்டு சொல்ல முடியாது. இது யார் வசமும் இல்லை. அங்கு காபி கிடைக்கவில்லை என்று சொல்ல முடியாது. உங்களுக்குத் தேவையானால் வெளியிலிருந்து தருவித் திருக்கலாம். ஆனால் நீங்கள் தான் செலவு செய்ய வேண்டும்.

அன்னம்மாள் :- சரி இதை விடுங்கள். நாடி சோதிடர்கள், நம்மிடமிருந்தே கேட்டுத் தெரிந்து கொண்டு, பிறகு அதை சுவடியில் இருப்பதாகச சொல்லி, நம்மை வியக்க வைக்கிறார்கள்.

என்னுடைய அனுபவத்தில் இம்மாதிரி கேள்விகளை எதிர்பார்த்தேன். அவர்களின் கூற்றானது நாடி சோதிடர் ஒரு ஓலையைக் கையில் வைத்துக் கொண்டு தங்கள் பெயர் 3 எழுத்துக்கள் உள்ளதா? ஆம் இல்லை என்று தான் நாம் பதில் சொல்ல வேணடும. இதை மறநது நாமே வலிய இலலை 4 எழுத்துக்கள் உடையது என்று சொலகிறோம. தாயாா உயிருடன இருக்கிறார்களா இல்லையா? நம்முடைய பதிலால் இதை அவர்கள் அறிந்து கொள்கிறார்கள். உங்களுடைய தகப்பனாரின பெயா அ, ஆ, இ முதலிய எழுத்துககளில ஆரம்பிக்கிறதா? இமமாதிரி கேளவிகளால நாம அறியாமலேயே, நாம பதில சொல்லிவிடுகிறோம். அதை வைத்துக் கொணடு சில சுவடிகளை நீக்கியும், ஏதாவது ஒரு சுவடியை கையில் வைத்துக் கொண்டு, நாம் கொடுத்த விபரங்களிலிருந்து, நமது வருங்காலத்தை உரைத்து நம்மை ஆச்சரியப்பட வைக்கின்றனா. சோதிடம் சொல்வதிலும், மறற சோதிடர்களைப் போலவே, நம்மை புகழ்ந்தும், சிறிது கெடுதல்களையும் சொல்லி, நம்மை வணங்கி ரூ.125/- நம்மிடம் காணிக்கையாகப் பெற்றுக்கொண்டு, ஒலி நாடா வையும், புத்தகத்தையும் கொடுக்கின்றனர்.

பலரின் எண்ணம் மட்டு மல்லாமல், சென்னை ஓரியண்டல் மானுஸ்கிரிப்ட் லைபரரியனின் கருத்தும் இவ்வாறே இருக்கக் கண்டு நான் ஆச்சரியமடைந்தேன். ஏனென்றால் இந்த லைபரரியில் தான் பலவிதப் பட்ட சோதிட சாஸ்திரங்கள், உதாரணமாக துருவ நாடி, சப்தரிஷி நாடி, தேவ நாடி, கேரள நாடி போன்றவை இவரின் மேற்பார்வையில் இருக்கின்றன. நான் அவரிடம் தாங்கள் தங்களுடைய ஜாதகத்தை பார்த்திருக்கிறீர்களா? என்று கேட்டேன் அவர் இல்லை என்று சொன்னார். அதிலிருந்து உங்களைப் போலவே (அன்னம்மாள்) இந்த சோதிடம் எல்லாம் பொய் என்று தீர்மானித்திருக்கிறார். நான் அன்னம்மாளிடம், நீங்கள் முதலில் உங்கள் ஜாதகத்தை, நாடி சோதிடம் மூலம் தெரிந்து கொண்டு, பின் உங்களுக்கு ஏற்படும் அநுபவங்களைச் சொல்லுங்கள். பதில் சொல்லும் போது, தங்களைப் பற்றி எதுவும் சொல்லாமல் எச்சரிக் கையாயிருங்கள் என்று

சொன்னேன்.

பிறகு ஒரு நாள் அன்னம்மாளுக்கு தன்னுடைய ஓலைச் சுவடியைக் காண நேர்ந்தது. அவர்களுடைய சுமுகமான உறவின் காரணமாக எனக்கும் அந்த ஒலி நாடாவைப் போட்டுக் காண்பித்தார்கள். அவருடைய கருத்து முற்றிலும் மாறிவிட்டது. 'நம்ப முடியாத அதிசயம்' என்று தான் தறபோது நாடி சோதிடம் பற்றி கூறி வருகிறார். முன்னர் கருதது வேறுபாட்டைப் பற்றி கூறிய போது, என் கண்ணெதிரி லேயே, என்னுடைய தாய் தந்தை கணவன் பெயர்கள் அந்த ஓலைச் சுவடியில் தமிழில் எழுதப்பட்டிருப் பதைக் கண்டு, என்னுடைய ஆட்சேபனைகள் எல்லாம் பறந்துவிட்டன என்று சொன்னார். என்னைப் பற்றி என்னிடமே அறிந்து, அந்த ஓலைச் சுவடிகளில் எழுதுவது என்பது நடக்க முடியாதது. ஓலைச் சுவடி களில் தமிழிலும் சங்கேத மொழியில் எழுதப்பட்டிருப்ப தால், சாதாரணமாக தமிழ் மொழி அறிந்தவர்கள் புரிந்து கொள்ளுவது என்பது கடினம். ஆனால் பெயர்கள் வழக்கு தமிழில் எழுதப் பட்டிருப்பதால புரிந்து கொள்ள முடிகிறது (அன்னம்மாளுக்கு ஓரளவு தமிழ தெரியும்)

பிறகு ஒரு தடவை அன்னம்மாள் மிகவும் கோபத்துடன் சொன்னார்கள்: இந்த நாடி சோதிடர்கள் எல்லாரும் மிகவும் கொள்ளையடிக்கிறார்கள். என்னுடைய உறவினர்கள், தாத்தா, நாததனாா முதலி யவர்கள் தெய்வபக்தி உள்ளவர்கள். இதுவரை, இது விஷயமாக 40, 50 ஆயிரம் வரை செலவழித்தி ருக்கிறார்கள்.

பொதுக் காண்டத்தில் (நாடி சோதிடம் 12 காண்டம் கொண்டது. பொதுக் காண்டம் என்பது முதல் காண்டமாகும்). நம்முடைய பூர்வ ஜன்ம பாபத்தின் காரணமாகவும், நடப்பு காலத்தில் கிரக நிலை களையும் அனுசரித்து சில விரும்பத் தகாத, கெடுதலான சம்பவங்களை நாம் சமாளிக்க நேரிடும். ஆனாலும் பயப்பட வேண்டியதில்லை. 13வது 14வது தீக்ஷா காண்டத்தில், அந்த சம்பவங்களையும், கெடுதல்களையும் நிவாத திக்கக் கூடிய சில உபாயங்கள் (அர்ச்சனை, தான தர்மம்) சொல்லப்படு கின்றன. அவைகளை அனுசரித்தலால் நமது வாழ்க்கை சுகமாகவும், அமைதியாகவும் காணலாம். இவ்விதம் சொல்லப்பட்ட பிறகு அதை யார் தவிர்க்க முடியும்? பூர்வ ஜன்மத்தில் நாம் அதிகம் பாவம் செய்திருந்தால் நாம் அதற்கேறப அதிகம் செலவு செய்ய வேண்டும். இந்த கோயிலுக்கு போக, இந்த கடவுளுக்கு அர்ச்சனை, ஆராதனை, அபிஷேகம் செய். ஏழை முடவர்களுக்கு தானம் செய். இந்த கோயிலில் தீபம் ஊற்று. முதலிய செலவுகள். இதுதவிர, ஒவ்வொரு காண்டம் பார்ப்பதற்கும் நாடி சோதிடர்களுக்கு காணிக்கை, (வேஷ்டி, லுங்கி, புடவை, இனிப்பு முதலியன). முதலான செலவுகள். போக்குவரவு செலவு, தங்கும் செலவு, சாப்பாட்டு செலவு எவ்வளவு செலவாகும். இதைத் தவிர சீதோஷ்ண பெட்டிகளில் பயணம், குடும்பததில் 7,8 பேருக்கான பரிகாரச் செலவுகள் எவ்வளவு ஆகும என்று நீங்களே கணக்கிடுங்கள்.

அன்னம்மாள் சொல்லியதில் தவறு ஒன்றும் இல்லை. கட்டை விரல் ரேகை அடையாளத்திலிருந்து பொதுக் காண்டத்தை படிக்கும் போது, நமக்கு ஏற்படக்கூடிய விபத்துக்களை தவிர்க்க, சாந்தி. தீக்ஷா காண்டத்தில் சொல்லப்பட்டிருக்கும் பரிகாரங்களை செய்ய முயலுவது இயற்கையே. இப் பரிகாரங்களுக்காக ஆகும் செலவு, போக்குவரவுச் செலவு, நாடி சோதிடர்களுக் கான காணிக்கை, தான தர்மங்களுக்கான செலவுகள் எல்லாம் அதிகமே. யாராவது பூரா காண்டங்களையும் அறிய விரும்பினால், ஒவ்வொரு காண்டத்திற்கும் ரூ.100/- ஆக ரூ.1200/- வரை செலவாகும்.

இம்மாதிரி செலவுகள் குறைந்தபட்சம் ரூ.5000/- செலவாகலாம் என்பது என் கருத்து. நம்முடைய பொருளாதார நிலைக்கேற்ப இதர செலவுகள், (போக்கு வரத்து, தங்கும், சாப்பாட்டு செலவுகள்) ஆகலாம்.

என்னையே உதாரணமாக எடுத்துக் கொண்டால ராகு கிரகங்களின் பூஜை முதலிய வற்றிற்காக 4, 5 கோயில் போக வர செலவு, தான தர்மங்கள எல்லாமாக 4,5 ஆயிரம் செலவாயிருக்கக் கூடும்.

சசிகாந்த் அவர்களே, இந்த பரிகாரங்கள் பூஜை, சாந்தி முதலியவற்றை நம்பு கிறீர்களா?

அன்னம்மாளின் இந்த எல்லோராலும் கேட்கக் கூடிய வினாவிற்கு வேறு ஒரு கட்டுரையில் விடை கொடுக்க முயற்சி செய்கிறேன்.

வாசகர்களுக்கு, இந்த அன்னம்மாள் யார்? என்பது குறித்து ஆவல் ஏற்படுவது இயற்கையே. விமானப் படையில் வேலை செய்யும் வாசகர்களுக்காக, நாடி சோதிடத்தில் அவர் குறித்து சொல்லப்பட்ட விஷயங்களை, அவருடைய அனுமதியின் பேரில் வெளியிடுகிறேன்.

விகாரி ஆண்டு மாசி மாதம், துவாதசி 12ம் நாள், புதன் கிழமை, உத்திராட நட்சத்திரத்தில் பிறந்த அன்னம்மாள் நல்ல குலத்தில் பிறந்தவர். குடும்பத்தில் எல்லோரை விட இளைய பெண், தாயார் தந்தை உயிருடனிருக்கின்றனர், ஒரு தமக்கை கலியாணமானவர், இதர ஜாதி இளைஞருடன் விவாகம், பெண்ணும், மகனும் காலேஜில் படிக்கின்றனர். கணவர் நல்ல சர்க்கார் வேலையில் உள்ளவர், ஜாதகரின் பெயர் - அனுராதா, தந்தையின் பெயர் யோகராஜ், தாயாரின் பெயர் ஷீலா, கணவரின் பெயர் கோவிந்தன். இந்த உண்மையான விஷயங்கள் நாடி சோதிடம் மூலம் தெரிய வருகிறது. இவரது கணவர் விங்க் கமாண்டர் **P.N.கோவிந்தன்** என்று அறியப்படுகிறார்.



With Best Compliments From

**SONYA BAPU KUMBHOJKAR**

874, Gaonbhag ,
Sangli - 416 416.




WITH BEST COMPLIMENTS FROM

# JSR REAL ESTATES

10, CHAMIER ROAD
NANDANAM
MADRAS - 600 035
TELE : 452828
FAX : 91-44-4821897

*" It is remote - science which has relevance with Einstein's theory of relativity and Astral Body Travelling. Nadi Prdictions have been evolved from our own Rishies several thousand years back which are still very relevent. Morethan 90% of predictions have been true in my own personal life".*

*A view by Mr. Rajesh*
*- Cine Actor*





# நாடி சோதிடமும் பரிகாரங்களும்

ஸ்டேஷன் வந்தவுடன் ரயில் வண்டி நின்றது. சில பிரயாணிகள் இறங்கினா். ஏறுபவா்களின் ஆரவாரம் ஆரம்பமாகியது. அதில் ஒருவா் டிரங்க் பெட்டி, படுக்கை, பை முதலியவைகளை தன்னுடைய தலையில் சுமந்து கொண்டு பெட்டியில் ஏறினாா். அதற்குள் வண்டி நகர ஆரம்பித்தது. சிறிது நேரம் கழிந்தும் கூட அந்த நபா் தலையிலிருந்த சுமையை இறக்கவில்லை. அதைப் பாா்த்த ஒரு பெண் பிரயாணியால் சும்மா இருக்க முடியவில்லை. "சகோதரா, நீங்கள் ஏன் சிறிது இடம் பிடித்து தலையிலுள்ள சுமையை இறக்கக் கூடாது".

அந்த நபா் அதை காதில் வாங்கிக் கொள்ளவில்லை. மிகவும் திடமாக இருந்தாா். மிகவும் கட்டுப்பாடுகள் உள்ளவா் என்று அவரை பாா்த்ததிலிருந்தே தெரிந்தது. நெற்றியில் சந்தனம், மஞ்சள் கீற்று, வெண்ணிறமான சட்டை, அதன் மேல் கோட், கீழே தொங்கும் வேஷ்டி. ரயில் பெட்டியில் தன்னுடைய சாமான்களை கீழே இறக்காமல் தலையிலேயே சுமந்து கொண்டிருக்கும் அவரைப் பாா்த்த மற்ற பிரயாணிகளால் சிரிப்பை அடக்க முடிய வில்லை.

ஒருவா் தைரியமாக கேட்டாா் 'தாங்கள் ஏன் சாமானை கீழே இறக்கக் கூடாது'.

" ஒரு கொள்கைதான். நான் எனக்கு டிக்கட் வாங்கி யிருக்கிறேன். ஆனால் சாமானுக்கல்ல. ஆகையால் தலையிலேயே சுமக்கிறேன என்று அந்த நபா் சொன்னாா். "நீங்கள் சொல்வது சரிதான். ஆனால் ரயில்வேக்காராா்கள் நீங்கள் தலையில் வைத்துக் கொள்கிறீா்களோ அல்லது கீழே வைப்பீா்களோ அது பற்றி கவலைப்படவில்லை. பின் நீங்கள் ஏன் கவலைப்பட வேண்டும். தண்டவாள மல்லவோ கவலைப்பட வேண்டும் என்றும் இன் னொருவா் விவாதம் செய்தாா்.

"அது போகட்டும். நீங்கள் நாடி சோதிடம் பாா்த்தீா்களா, இல்லையல்லவா. முதலில் அதைப் பற்றி தெரிந்து கொண்டு பிறகு என்னிடம் பேசுங்கள்".

"அரே அல்லா! இதுவரை நாடி என்றால் இருவகை தான் தெரியும். ஒன்று தாகரேயின் சட்டி நாடி. மற்றொன்ற கை நாடி பாா்த்தல். இந்த மூன்றாவது நாடி எங்கிருந்து வந்தது. ஒரு முஸ்லீம் அன்பா் கேட்டாா்.

கைக்கட்டை விரல் ரேகையை வைத்துக் கொண்டு பனை ஓலைச் சுவடியிலிருந்து படிக்கப்படும் சோதிடத்தை நாடி சோதிடம் என்று சொல் கிறாா்கள். சிறிது காலத்திற்கு முன் தான் அதைப் பற்றி படித்தேன். அதன் காரணமாக பரிகார காண்டத்தில் சொல்லியபடி பூஜைகள் முடிப்பதற்காக தென்னிந்திய யாத்திரை கிளம்பியிருக்கிறேன்".

"அதாவது தாங்கள் விமானப்படை அதிகாரி சசிகாந்த் ஓக் அவா்களின் கட்டுரையைப் படித்து தங்களுடைய வருங் காலத்தைப் பற்றி தெரிந்து கொண்டீா்களா? ஆச்சரியமான விஷயம் தான்.

"ஆம். நான் தங்களுடைய சோதிடத்தை அறிய கடடை விரல் அடையாளத்தை தபாலில் அனுப்புபவன் அல்ல. அதனால் நேரம் வீணாகிறது".

"அது சரி, ஆனால் இந்த பரிகார காண்டத்திற்கும், தாங்கள் மூட்டையை சுமப்பதற்கும் என்ன சம்பந்தம். இது எனக்கு புரியவில்லை".

"விஷயம் என்னவென்றால், நமது வருங்காலத்தைப் பற்றி அறியாத போது எல்லாம் ஆண்டவன் விட்ட வழி என்று விட்டு விடுகிறோம்" எது நடக்க வேண்டுமோ அதன்படி நடக்கும். ஆனால் நாடி சோதிடத்தைப் பற்றி அறிந்த பின், பின்னால் நேரக் கூடிய சம்பவங்களைக் குறிப்பிடுவது கண்டு இருதயம் துடிக்கிறது. தலை சுற்றுகிறது. சிலருக்கு கல்யாணக் கவலை. சிலருக்கு சந்ததியில்லை என்ற குறை. சிலருக்கு வேலையாகவில்லை என்ற கவலை. சிலருக்கு கைக் கெட்டியது வாய்க் கெட்ட வில்லை என்ற கவலை. ஆயிரக்கணக்கானவா்க்கு ஆயிரக்கணக்கான கவலைகள். ஒவ்வொருவரும் தங்களுடைய பிரச்னைகளை தீா்ப்பதற்கு நாடி சோதிடத்தில் சொல்லிய பரிகாரங்களைப் பற்றி அறிய முற்படுகிறாா்கள். அந்த காண்டத்தில் பல இடங்களுக்கு யாததிரை சென்று பரிகாரங்களுக்காக நவக்கிரஹங்கள் உள்ள க்ஷேத்திரங்களுக்கு சென்று பூஜை செய்தல், ஏழை முடவா்களுக்கு தானம் செயதல, அன்னமளித்தல், பிராமமணாகளைக கொண்டு ஹோமம் செய்தல் முதலியன சொல்லப்பட்டிருக்கின்றன.

"வருங்காலத்தைப் பற்றி நன்றாக சொல்வதோடு கூட நிகழக்கூடிய விபத்துகளிலிருந்தும, கஷ்டங்களிலிருந்தும் நிவாத்தி பெற வழி முறைகளும சொல்லப்படுகின்றன. அதனால் நாடி சோதிடம் பாா்க்க வேண்டியது தான்" - ஒரு பிரயாணி சொன்னாா்.

"இதில் என்ன கெடுதல்? யாத்திரை என்று கிளம்புவது தான் கிளம்புகிறோம். அந்த சுகததை அனுபவிப்பதோடு கூட பூஜைகள், அா்ச்சனைகள் முதலியன செய்து நிகழக்கூடிய விபதது களைத தவிா்ப்பதும் நல்லதுதானே" ஒரு யாத்திரிகனின் மனதில் உறைத்தது".

"நிகழ் காலத்தில் விபத்துகள் ஏற்பட வேண்டாம். மேலும் மங்களகரமான நிகழ்ச்சிகளுக்கு பாதிப்பும் ஏற்பட வேண்டாம். இந்த நோக்கத்தில் பரிகாரங்கள் செய்ய முற்படுவது தவிா்கக முடியாதது. ஆனால் இதற்காக பல இடங்களுக்கு செல்வது, நீண்ட பயணங்கள், விடுமுறை, தங்குவது, உண்பதற்கான செலவுகள், அசௌகரியங்கள், பாஷை புரியாதது எல்லாவறறைக் காட்டிலும் இதனால் ஏற்படும் செலவு" ஒரு பிரயாணி கவலைப்பட்டாா்.

"ஏழை முடவா்களுக்கு அன்னமளித்து அவா்களை திருப்திப்படுத்துவதனால் ஏற்படும் வாழ்த்துக்கள் மிகவும் முககியமல்லவா".

"கோவில் வாசலில் உட்காா்ந்திருக்கும் முடவா்கள் வியாதியஸ்தா்கள் .மேலும் ஏழை எளியவா்களுக்கு ஒரு வேளை அன்னமளித்து இலவசமா புண்ணியம் செய்ய விரும்புகிறாய இது சா்க்காரின் வேலை. ஏ

எளியவர்கள் பசியைப் போக்குவது". ஒவ்வொரு வேலையிலும் சாக்காரை தாக்கும் பெர்ணாண்டஸ் குரல் கொடுத்தார்.

"இது ஒன்றும் பெரிதல்ல. வரப்போகும் இன்னல்களை தீர்க்கலாம் என்று சோதிடர் சொன்னார் என்று ஊரிலுள்ள கோயில்களில் கற்சிலை களுக்கு பாலாபிஷேகமும், தேனாபிஷேகமும், பஞ்சாமிர்த அபிஷேகமும் செய்வது முற்றிலும் பைத்தியக்காரத் தனம்" இது ஒரு சமூக சீர்திருத்தவாதியின் குரல்.

"நமது வருங்காலத்தில் என்ன நிகழும் என்று தெரியாத போது எல்லாமே கடவுள் செயல் என்று விட்டு விடலாம். ஆனால் நமக்கு எப்போது பூர்வ கர்ம பாவங்களைப் பற்றியும், வரக் கூடிய சங்கடங்களைப் பற்றியும் தெரிய வரும்போது எல்லாம் கடவுள் செயல் என்று விடமுடியுமா? அந்த பிரச்னை களை சுமப்பது தான் நலம். அது தவிர வேறு வழியில்லை".

நாடி சோதிடம் அறிந்த பின் அதன்படி பரிகாரங்களை செய்ய நேரிடுகிறது. அதை இவ்வாறும் சொல்லலாம் "பரிகாரங்கள் என்ன செய்ய வேண்டும் என்பதையறிய நாடி சோதிடம் பார்க்க வேண்டும். ஆகையால் எப்போது ஒரு பரிகாரங்களை போக்கும் மனிதன், தன்னுடைய பாபத்தின் சுமைகளை சுமக்கிறானோ, அவன் ரயில் பெட்டியில் ஏறியும் சாமானைத் தலையில் சுமக்கும் அந்த மனிதனைப் போன்றவனே".

ரயில் வண்டி நகர்ந்து கொண்டேயிருந்தது. ஆனால் ஒவ்வொரு பிரயாணியும் நாடி சோதிடத்தைப் பற்றியே தங்கள் மனதில் விவாதித்துக் கொண்டிருந்தனர்.

"மேலும் ஒருவருக்கு நடப்பது நடந்து தான் தீரும் என்றால் அதற்கு அகஸ்திய முனிவரும் இதர முனிவர் களும் என்ன தான் செய்ய முடியும்" என்ற சந்தேகம்.

"நீங்கள் சொல்வது சரி. மழை வந்தால் குடை பிடிப்பது போல்தான் இதுவும். நம்மில் யாரும் மழையைத் தடுக்க முடியாது. ஆனாலும் மழைத் துளிகள் நம் மீது விழாமல் தடுக்க முடியும். அது போன்று தான் தீக்ஷா காண்டத்தில் சொல்லி யுள்ள பரிகாரங்களால் தீமைகளை தடுக்க முடியா விட்டாலும், அதன் விளைவுகளை கட்டுப்படுத்த முடியாதா?

"நாடி சோதிடம் பார்க்கும் போது நாம் ஒரு டாக்டர் போல் இருக்க வேண்டும். சாந்தி தீக்ஷா (பரிகார) காண்டத்தில் சொல்லிய உபாயங்களில் உங்களுக்கு நம்பிக்கையில்லா விட்டால் செய்யத் தேவை யில்லை. ஆனால் பரிகாரங்கள் தேவை என்று மனதில் பட்டால் மிகவும் சிரத்தையுடன் அவைகளை மேற்கொள்வது அவசியமாகும். இல்லாவிட்டால் வீணான செலவும், நேரம் வீணாவது தான் மிச்சம். ஆகையால் எச்சரிக்கை.

"மிகவும் சிரத்தையுடன் பூஜைகள் அர்ச்சகனைகள் செய்யவேண்டும் என்று மனதில் தோன்றுகிறது. கோவில் கற்சிலைகளில் இருக்கும் கடவுளைத் தேட வேண்டும் என்று தோன்றுகிறது. ஆனால் நமது நிலை குறுக்கே நிற்கிறது. வழியில் பஸ் கிடைப்பதில்லை. நேரம் கிடைப்பதில்லை. கோவிலுக்கு போவது அசாத்தியமாகிறது. யாராவது பார்த்தால் என்ன சொல்வார்கள் என்ற பயம் வேறு. வீட்டிலேயே ஹோமம் செய்வது என்றாலும் மனம் வெட்கப் படுகிறது. மற்ற நண்பர்கள் என்ன சொல்வார்கள் என்று இந்த பயங்கொள்ளித் தனத்தையும், பிரச்னைகளையும் விலக்கி, விவாதத்திற்குட்படாமல், இம்மாதிரி வேடம் தரித்துள்ளேன். விஞ்ஞானத்தில் பேராசிரியரா யிருந்தும் கூட என்னுடைய சுமையை தலையில் தூக்கிக் கொண்டு யாத்திரைக்கு கிளம்பி யுள்ளேன்".

பிரயாணிகள் தங்கள் தங்கள் இடத்திற்குப் போய்ச் சேர்ந்தனர். வீட்டிற்கு போனவுடன் ஒவ்வொருவர் மனதிலும் நாடி சோதிடம் பார்ப்பதா வேண்டாமா, பரிகாரங்கள் செய்யலாமா வேண்டாமா என்ற சர்ச்சை ஏற்பட்டது.




With Best Compliments From

Mrs. ASHA PATASKAR
113, Narayan Peth,
Pune - 411 030.
Tele : 457064

With Best Compliments From



BEETA ASPHALT AND FELTS
BEETA TRANSPORT COMPANY



H-1586, 6th Street,
off 11th Main Road,
Anna Nagar,
Madras - 600 040.

with respectful



Tribute to
Father-in-Law of
Annamma
( Late )
Lt. Col. N. Nair.

# பிருகு சம்ஹிதையும் நானும்

பம்பாயில் இருக்கும் பிருகு சம்ஹிதைக்காரர் பாபுபாய ஜோஷியை எனக்கு தகப்பனார் மூலமும் சில நண்பர்கள் மூலமும் தெரியும். எனது சிறு பிராயத்தில் காலஞ்சென்ற சாந்தாராம் ஆடவிலேயின் கட்டுரையில் அவர் பெயர் குறிப்பிடப் பட்டிருந்ததை அறிவேன். சாதாரணமாக அவரை சந்திக்க முடியாவிட்டாலும், ஒரு சம்பவத்தின் மூலம் அவரை சந்திக்க நேர்ந்தது.

1976 ஜூலை மாதம் நான் மிக்க துக்கத்துடனும் கவலையுடனும் இருந்த நாட்கள். அந்த நாட்களில் ஒரு விபத்தில் எனது முதல் மனைவி சாயாவை இழந்திருந்தேன். அதன் பிறகு வீட்டிற்கு வந்தேன். அதன் பிறகு ஸ்ரீநகரில் வேலையிலிருந்த போது ஒரு முறை எனது மைத்துனர் (பம்பாய் ) வீட்டிற்கு வந்து சில நாட்கள் தங்கியிருந்தேன்.

எனது மைத்துனர் அவினாஷ ரானடே எனது உறவினரும் கூட ஒரே தெருவில், ஒரே பாடசாலையில், ஒரே காலேஜில் படித்த காரணத்தால் நண்பரும் கூட. பம்பாயில் உலவிக் கொண்டிருந்த போது ஒரு நாள் அவினாஷுக்கு சோதிடம் பார்க்க வேண்டுமென்று தோன்றியது. நானும் சரி யென்றேன். நாங்கள் சாயா சோதிடர் பாபுபாய் வீட்டிற்குச் சென்றோம்.

அன்று 27.11.1976 மதிய நேரம். சாஸ்திரியின் மகன் முன் கூட்டி தகவல் இல்லாமல் அவரைப் பார்ப்பது கடினம் என்று சொன்னார். நான் ஸ்ரீநகரிலிருந்து வந்திருக்கிறேன். திரும்பவும் வருவது கடினம் என்று வற்புறுத்தி சொன்னவுடன் ஒப்புக் கொண்டார். நாங்கள் திரும்பவும் இரண்டு மணிக்குச் சென்றோம். ஒரு ஹாலுக்கு அழைத்துச் சென்றார். பெரிய மேசை முன்னால் உட்கார்ந்து பனை ஓலையைப் பார்த்துக் கொண்டிருந்தார். அன்று என்னுடைய ஜாதகத்தையும் வைத்திருந்தேன். அதைப் பார்த்து சாஸ்திரி தனக்குள் ஏதோ ஒரு கணக்கு போட்டு பார்த்து எதிரில் உள்ள பனை ஓலைகள் ஒன்றிலிருந்து படிக்க ஆரம்பித்தார்.

நான் பார்த்தது பார்த்தபடி இருந்தேன். என்னுடைய பனை ஓலையைப் பார்பபதற்கு, மேலேயிருந்து ஆயிரக்கணக்கான ஓலை களிலிருந்து தேடிக் கண்டுபிடிப்பதற்கு தூசி தட்டி கொண்டு வருவதற்கு நேரம் ஆகலாம் என நினைத் திருந்தேன். ஆனால் இங்கோ சாஸ்திரிகள் உட்கார்ந்து கொண்டே படிக்க ஆரம்பித்து விட்டார். நான் கேட்டவுடன் பதில் சொன்னார், "நாங்கள் முன்னாடியே இன்று எந்த ஜாதகர் சோதிடம் கேட்க வருவார் என்பதை தீர்மானித்து விடுவோம். அதன்படி ஓலையை முன்னாடியே சேகரித்து வெளியில் வைத்து விடுவோம். உங்களுக்கு என்ன பாஷை தெரியும், ஆங்கிலமா, இந்தியா, மராத்தியா, குஜராத்தியா, பேனாவும் பேப்பரும் கையில் எடுத்துக்கொண்டு அவர் பேச ஆரம்பித்தார்.

என்னுடைய தாயார், தகப்பனார் பெயர் சரியாக இல்லாத காரணத்தினால் சில ஓலைச் சுவடிகளை தனியாக வைத்தார்.

ஒரு ஓலையில் எல்லாம் சரியாக இருந்தது. ஆனால் தகப்பனாரின் பெயர் ஜகன்னாத். அதையும் தனியாக வைத்தார். ஆனால் நான் சரியாக இருக்கலாம் என்று சொன்னேன். சாஸ்திரி மற்ற ஓலைகளை படித்துக் கொண்டே சென்றார். ஒரு ஓலையில் எல்லா சமாசாரங் களும் சரியாக இருந்தன.

பிறந்த ஊர் பூ முதலிய எழுத்தில் ஆரம்பமாகும் - அதாவது பூனா.

பிராமண குலம் - சித்த பாவன். வசிஷ்ட கோத்திரம், பிறந்த தேதி 31.7.1949 (சரி)

11வது வயதில் கழுத்தில் ஆபரேஷன் (60ல் டான்ஸில் ஆபரேஷன், சகோதரன் ஒருவரும் இல்லை. சகோதரிகள் - சிறியவர்கள் 2 - (சரி)

17-18வது வயதில் College படிப்பு. 22வது வயதில் தேச பாதுகாப்பு சம்பந்தமான வேலை - அதுவும் பறக்கும் படை (Air Force. சாஸ்திரி சொல்லியபடி - எல்லாம் சரி).

26வது வயதில் தன்னுடைய ஜாதியில் திருமணம் (2.3.1975ல் சாயா வுடன் திருமணம்) 27வது வயதில் முதல் மனைவியின் மரணம் - பெயர் சாயா - தாயாரின் பெயர் - மங்களா - தகப்பனாரின் பெயர் ஜனார்த்தனன். இருவரும் உயிருடனி ருக்கின்றனர் (அந்த நாளில்). ஜாதகரின் பெயர் - சசிகாந்த். அவர் இப்போது தன்னுடைய ஜாதகம் பார்த்துக் கொண்டு அருகில் இருக்கிறார் (சரி) - கற்பனை பண்ணும் சுபாவம் - (கற்பனை பக்தி மூலம் பிறரை திருப்திப்படுத்து வீர்கள் என்று அகஸ்திய முனி - காண்டம் 11) பாஷை - சாதாரண அறிவு - விளையாட்டு, சினிமா மூலம் பல விஷயங்களில் இந்தி, மராட்டி, ஆங்கில மொழிகளில் விடுகதைகளில் விருப்பம்) 32வது வயதில் - மறுமணம். தர்மங்கள் செய்வதற்கு மட்டும், அதில் தடையேற்படக்கூடா தென்று. (நான் விவாகம் செய்து கொள்ள விரும்பவில்லை. ஆனால் கர்மாக்கள் செய்வதற்கு தேவை என்று தகப்பனார் ஜாதகம் பார்த்து சொன்னதால் ஒப்புக் கொண்டேன்) - இரண்டாவது தாரம் - அதே ஜாதி - கல்வி அறிவுள்ளவள் - குட்டையான சரீரம், சிகப்பு நிறம், திடமான, உக்ரமான சுபாவம் - முதலியவை சொல்லப் பட்டிருந்தன (பிறகு எல்லாம் சரியாக இருந்தது) - 14, 26, 30வது வயதில் எந்த நபரின் பரிச்சயம் ஏற்படுகிறதோ அவர்களின் மரணம் (24வது வயதில் - ஏதும் நடக்கவில்லை, 26வது வயதில் மனைவியின் மரணம், 30வது வயதிற்கு முன் (29.7.1978) முதல் பிரசவத்தின் காரணமாக உயிருடனி ருக்கலாம்). 34, 35வது வயதில் தகப்பனாரின் மரணம் (தகப்பனார் 32வது வயதில் மரணமடைந்தார்)

-45வது வயது வரை தாயார் உயிருடனிருப்பார் (இன்றுவரை உயிருடனிருக்கிறார்) (55 வயது அதற்கு பின்னால் வரை தாயார் உயிருடனிருப்பார் என்று அகஸ்திய முனி காண்டம்-4) - 55, 56 வயதில் வேலை யிலிருந்து ஓய்வு - அதற்கு முன்னால் பையன், பெண்ணின் திருமணம் - 64 வயதிற்கு பின் இருதய நோய் காரணமாக மரணம் முதலிய சம்பவங்களைச் சொல்லிக் கொண்டு போனார். அகஸ்திய முனிவர் - ஆயுட்காலம் சம்பந்தமாக, அதற்கு பின்னும் உயிருடனிருக்கலாம் - 8வது காண்டம்) மேலே கண்டபடி படித்தவுடன் (குறியில் நீங்கலாக)

நான் மிகவும் கவரப்பட்டேன்.

அந்த நாட்களில் நான் உண்மையில் நடந்த விபத்து குறித்து அறிய ஆவலுடன் இருந்தேன். தனியாக சம்பாவனை செய்த பிறகு அது குறித்த காண்டத்தை சாஸ்திரி படித்தார். அதில் கிடைத்த விபரங்கள் பின் வருமாறு - மனைவியின் அகால மரணம் - இரண்டு சக்கர வண்டியில் பயணம் செய்யும் போது நான்கு கால் மிருகத்துடன் மோதல். -

இரண்டு 3 முனிவர்கள் இதை வேறு விதமாக குறிப் பிட்டார்கள். அது பின் வருமாறு.

- ஒருவரின் கருத்து - மிருகம் மனைவி மற்றும் புருஷன் இருவரையும் அடிக்கும். புருஷன் மனைவியை எச்சரிக்குமுன் மனைவி ஓடத் துவங்குவாள் - கீழே விழுந்து சிரசில் காயம்பட்டு மரணமுண்டாகும்.

- இரண்டாவது முனிவர் - மனைவியின் தலை மிருகத்தின் கால் பட்டு சிரசில் காயம்பட்டு அதனால் மரணம், வேறு வேறு மாதிரி சொல்லப் பட்டிருக்கிறது.

- மூன்றாவது முனிவர் - மிருகத்தின் கொம்பு காயத்தி னால் மனைவி காயமடைந்து அதனால் மரணம்.

இந்த முனிவர்களின் கருத்தி லிருந்து பிருகு முனிவரின் கருத்து வேறுபட்டது. பிருகு முனிவரின் கருத்துப்படி, வாகனத்தில் மிருகம் உரசிய தால், தடுமாற்றத்தினால் மனைவி கீழே விழுந்து, தலையில் காயம் பட்டதால் மரணம் ஏற்பட்டது. (நான் பருகு சம்ஹிதையில் சொல்லப் பட்ட கருத்து சரியென்று கருது கிறேன்). என்ன நடந்தது என்றால் நான் சண்டிகருக்கு மாற்றலான போது, நானும் சாயாவும் ஒரு ஞாயிற்றுக் கிழமையன்று பிஞ்சோர் கார்டன் பார்க்கச் சென்றோம். 11.7.76 ஒரு பூர்ணிமா இரவின் நிலவை ரசித்துக் கொண்டு திரும்பும் போது HMT கேட் அருகில் ஸ்கூட்டரின் வலது பிடியில் அழுத்தம் ஏற்பட்டது. தடுமாறி நான் கீழே விழுந்தேன். என்னுடைய தொடையில் ஸ்கூட்டரின் பாரம் அழுத்தியது. என்ன வென்று நினைப்பதற்கு முன் ஒரு இடையன் 4-5 எருமைகள் ஓட்டிச் சென்றதைப் பார்த்தேன். அவன் ஸ்கூட்டரை எடுத்து நான் நிற்பதற்கு உதவி செய்தான். மோதின சமயம் 'சசி' என்று என் மனைவியின் குரல் கேட்டது. அந்த இடம் நோக்கி நான் சாயாவை தேடிச் சென்றேன். ஆனால் அவள் ரோடில் நடுவில் விழுந்து கிடப்பதை எதிரில் வந்த காரின் வெளிச்சத்திலிருந்து அறிந்து கொண்டேன். நான் அவளருகில் சென்றபோது அந்த அம்பாசிடர் கார் நின்றது. சிலர் அதிலிருந்து இறங்கி வந்தனர். அவர்களின் உதவி யினால் சாயாவை அதே காரில் உட்கார வைத்து சண்டிகர் மிலிடேரி ஆஸ்பத்திரியில் சேர்க்குமாறு சொன்னேன். அதிர்ஷ்டவசமாக அந்த கார் ஹரியானா சர்க்காரின் உள்நாட்டு அதிகாரியின் அவசரத் தேவை காராக இருந்தது. சாயா இருமிக் கொண்டிருந்தாள். பயத்தின் காரணமாக அவளுக்கு மயக்கம் வந்திருக்கும் என்று நினைத்தேன். என்னுடைய ஆடை (பாண்ட்) கிழிந்திருந்தது. செருப்பும் கிழிந்திருந்தது. ஆனால் காலின் ஓரிரு இடங்களில் காயத்தை தவிர எனக்கு ஒன்றும் ஆகவில்லை. ஆஸ்பத்திரியில் ஒரு மேஜர் (டாக்டர்) சாயாவின் கேஸை எடுத்துக் கொண்டார். என்னை காயத்திற்கு கட்டு கட்டுவதற்கு வேறு இடத்திற்கு அனுப்பினார். கட்டு கட்டி திரும்பும் வழியில் மேஜரை சந்தித்தேன. என்னுடைய கையை ஆறுதலாக தட்டிக் கொடுத்துக் கொண்டே ``Sorry young man, உன்னுடைய மனைவி இப்போது உயிருடனில்லை" இதை நான் நம்ப முடியவில்லை. எதிரில் வரும் வாகனங்களின் வெளிச்சத்தில், பக்கத்தில் வந்த எருமை மாடுகளைப் பார்க்காமல் அவை மீது மோதியதால் ஸ்கூட்டரில் தடுமாறி விழுந்திருக்க வேண்டும். விழுந்த சமயம் சாயாவிற்கு தலையில் அடிபட்டிருக்க வேண்டும்" தலையில் அழுத்தமான காயம் காரணமாக மரணம் என்று மரண ரிபோர்ட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது.

பிருகு சம்ஹிதை உண்மையா பொய்யா என்பதை வாசகர்களின் வாதத்திற்கு விட்டுவிடுகிறேன்.




With Best Compliments From

Brig. Avinash Sarvate
Pune - 411 001.



With Best Complements From







A WELL WISHER



With Best Complements From







S. ANAND, DEVIKA, ADRTI AND ARJUN
133, CHAMIERS ROAD, MADRAS.
TEL : 457094

# பிருகு சம்ஹிதை - உறவினரும், நண்பர்களும்

என்னுடைய மைத்துனர் அவினாஷ் ரானடே பாபுபாயிடம் தன்னுடைய ஜாதகத்தையும் பாத்தார். இதை நான் முன்னமேயே சொல்லியிருக்கிறேன். இப்பொழுது அவருடைய வருங்காலத்தைப் பற்றிய சோதிடத்தில் என்ன நடந்தது, நடக்கவில்லை என்பதை பார்ப்போம். அவினாஷ் பருகு ஸம்ஹிதை நாடி சோதிடம் 11.10.1973 அன்று பார்த்தார்.

பிறந்த இடம்-பம்பாய் தகப்பனாா தாயாரின் பெயர் சரியாக இருந்தது. (என்னுடைய சகோதரி) லதா (விவாகத்தின் முன்னால்) வோடு காதல். தாயார் தந்தையரின் விரோதம் - கல்யாணத்தின் பின் சரியாகிவிடும். சனீஸ்வரனுக்கு பூஜை செய்வதனால் பரிகாரம் உண்டு (எல்லாம் சரி).

லதாவுடன் திருமணம் (1974 மே மாதம்) (கல்யாணத்திற்கு பின் ஜெயஸ்ரீ என்று பெயர்)

- 28-30 வயதில் உத்யோகத்திலிருந்து விலகல் (1, 2 வருடங்களுக்கு முன்னால் Dry Cell battery Factory திறந்ததினால் உத்யோகத்தை விட்டுவிட்டார். என்ன உத்யோகம் என்று சொல்லப் படாவிட்டாலும் வேறு வேலை என சம்ஹிதையில் குறிப்பிடப் பட்டுள்ளது.

- 34-36 வயதில், வீடு, வாகன வசதி (சரி)

- 37-39 மேன்மையான காலம் (தொழிற்ச்சாலையின் பங்குதாரர் இல்லாமல் தனிப்பட்ட முறையில் தொழில்) 1987ல் 'லிவோ' என்ற பெயரில் தனிப் பட்ட முறையில் செல் தொழிற்சாலை நிறுவுதல்) அதற்குப் பிறகு 67 வயது வரை வேறு வேறு சம்பவங்கள் சொல்லப்பட்டன. 6.5.1989ல் மாருதி காரில் வரும் போது பால் லாரி மோதியதில் ஒரு நண்பருடன் கூட மரணம். 1973க்குப் பிறகு அவிநாஷ் ரானடே 1981ல் பிருகு நாடி மறுபடியும் பார்த்தார். ஆனால் விபத்தினால் மரணம் என்று குறிப்பிடப்படவில்லை. 67லிருந்து 73 வரை ஆயுள் பாவம் சொல்லப்பட்டது. வைகாசி மாதம் ஏகாதசியன்று மரணம் சம்பவிக்கும் என குறிப்பிடப்பட்டிருந்தது. இது மட்டும் பலிக்கவில்லை.

எனது தகப்பனார் காலஞ்சென்ற ஜனார்தன் சிந்தாமணி ஒக் பாபுபாயை அறிவார். தன்னுடைய ஜாதகத்தை அவர் பார்த்திருந்தார். அதுதான் எனக்குத் தெரியும். ஆனால் இது சம்பந்தமாக ஏதும் விவாதம் செய்யவில்லை. 1981 ஜனவரியில் அவர் காலமானார். பிறகு தஸ்தாவேஜுகளை பார்க்கும் போது அவருடைய குறிப்பு கிடைத்தது. தாய் தந்தையர் பெயர் பிறந்த இடம் எல்லாம் சரியாக இருந்தன. வீடு வாகன வசதி சொல்லப்பட்டிருந்தது. வீடும் வாங்கினார். ஆனால் வாகன (கார்) அவர் வாங்கவில்லை. (சைக்கிள் வாகனம் என்று கருதப்பட வில்லையென்றால்) சர்க்கரை வியாதி 64-65 வயதில் சிறிய ஆபரேஷன், 66 வயதில் இரத்த அழுத்தம் மற்றும் இருதய நோயால் அவதி. 67வது வயதில் புஷ்ய சுக்ல அஷ்டமி மாரடைப்பால் மரணம் முதலியன குறிப்பிடப் பட்டிருந்தது. அவருடைய மரணம் 11-1-1981ல் (புஷ்ய சுக்ல ஷஷ்டி) ஒரு வருடம் தான் வித்தியாசம்.

என்னுடைய விமானப் படையில் சேருதல், என்னுடைய மனைவியின் விபத்தால் மரணம் அதில் குறிப்பிடப்படவில்லை. தங்களுடைய புத்திரர் துணிக்கடை வைப்பார் என்று சொல்லப்பட்டிருந்தது.(தவறு). தகப்பனார் சிறிய சகோதரி லதாவின் ஜாதகத்தை 1966ல் பார்த்திந்தார். அப்போது அவள் வயது 13. காலேஜ் படிப்பு கிடையாது என்று சொல்லப் பட்டிருந்தது. அப்போது சரியாக இருந்த போதிலும் பின்னால் 1994ல் அவள் வணிகவில் இளங்கலைப் பட்டம் பெற்றாள்.

28 வயதில் மகன் 2 மகள்கள் ஏறபடும் என்று சொல்லப்பட்டது. (29 வயதில் மகனும் 30ல் மகளும் பிறந்தனர்). அன்னிய நாட்டுப் பயணம், 33 வயதில் (சரியல்ல). 36 வயதில் வாகன சுகம் (33 வயதிலேயே கார் வாங்கினாள்). அதன் பிறகு 58 வயது வரை அவரது கணவருடன் விபத்து குறிப்பிடப் படவில்லை (அவளுடைய கணவனின் மரணத்திற்கு பிறகு தன்னுடைய மைத்துனருடன் கூட தொழிற்சாலையை கவனித்து வருகிறாள். அது பற்றி பிருகு நாடியில் சொல்லப்படவில்லை. அகஸ்தியர் நாடியில் சகோதரியின் விஷயத்தில் மற்றவை சரியாக சொல்லப் பட்டன. ஆனால Dry Cell Factory, கணவனின் மரணம் முதலியவை ருசிகரமாக சொல்லப பட்டிருந்தன. அதன் பிறகு மைத்துனனுடன் கூட மகனுடன் கூட தொழிற் சாலையை கண்காணிப்பார்கள், மேன்மை யடைவார்கள் என்று சொல்லப் பட்டிருந்தது.

பிருகு நாடியில் குறிப்புகள் ஒரு முழு காகித அளவில் வர்ணிக்கப்பட்டிருந்தது சம்பவங்கள், வருங்காலம் சரியாக சொல்லபபட வில்லை என்பது என் அனுபவம்.

**நண்பன் ஸ்ரீ ஜோஷி**

பாங்க் ஆப் மகாராஷ்டிராவி லிருந்து ஓய்வு பெற்றுள்ள நணபன் ஸ்ரீ சுரேஷ் ஸ்ரீ பாத ஜோஷி, பிருகு நாடி (சம்ஹிதை) சம்பந்தமாக பம்பாய் பாபுபாய் ஜோஷியிடம் தனக்கு ஏற்பட்ட அனுபவத்தை இவ்விதம வர்ணிக்கிறார்.

"1971ல் நான் இரண்டு நண்பர்கள் கூட பாபுபாய் சோதிட நிலையத்திற்கு சென்றேன். நண்பர்கள் பெயர் ஹஸ்பனீஸ் மேலும் பிரதான். பாபுபாய் சோதிடம் சொல்லும் முறை ஜோஷி அறிந்திருந்தார். ஜோஷியை கூப்பிட்டவுடன் அவர் தன் நண்பன் ஹஸ்பனீஸை உள்ளே அனுப்பினார். சிறிது நேரம் கழித்து அவர் திரும்பி வந்தார். ஜோஷி மறுபடியும் பிரதானை அனுப்பினார். ஆனால் பாபுபாய் வெளியே வந்து ஜோஷியின் கையைப் பிடித்து உள்ளே அழைத்துச் சென்றார். மேலும் என்ன என்னுடைய அறிவை பரீட்சை செய்கிறாயா என்று கேட்டார்.

பாபுபாய் ஜோஷி வந்திருப்பதை எப்படி தெரிந்து கொண்டார்? இது யோசிக்க வேண்டிய விஷயம். அதற்கு முன் அவரை அவருக்குத் தெரியாது.

ஆனால் அவருடைய ஆருடம் நல்ல விதமாக இல்லை. 24 வயதில் திருமணம் என்றால். ஆனால் 23 வயதிலேயே திருமணம் நடந்தது. 3 குழந்தைகளுக்குப் பதில் 4 குழந்தைகள் பிறந்தன. பார்வை கம்மியாகும் என்றார். அது மட்டும் சரியாக இருந்தது. மறுமுறை சந்தித்த போது இது பற்றி கேட்டதற்கு பாபுபாய் ஏதோ சொல்லி சமாளித்து அனுப்பிவிட்டார். ★

# நவக்கிரகக் கோயில்கள்

நாடி சோதிடத்தில் சாந்தி தீக்ஷா காண்டத்தில் சொல்லப்பட்ட பரிகாரங்கள், மிக்க ஈடுபாட்டுடன் செய்தல வேண்டும். பலன்களைப் பெறவும், கஷ்ட துக்கங்கள், கவலை, பிரச்னைகள் நீங்க வழிகள் நாடி சோதிடக் கலை உணர்ந்த முனிவர்கள் கொடுத்துள்ளார்கள். யாருக்கு அதில் நம்பிக்கை உண்டோ அவர்களின் நலன் கருதி, நவக்கிரக கோயில்களும், அதன் விலாசமும், அதை அடையும் வழியும் வரை படமும் (Map) மூலம் தீர்மானித்துக் கொள்ளவும்.

| எண் | கிரகம் | ஊரின் பெயர் | முக்கிய குறிப்புகள் |
|---|---|---|---|
| 1. | சூரியன் | சூரியனார்கோவில் | கும்பகோணத்திற்கருகில் ஆடுதுறையிலிருந்து 1 கி.மீ.தூரத்திலுள்ளது. |
| 2. | சந்திரன் | திங்களூர் | திருவையாற்றிற்கு அருகில் |
| 3. | செவ்வாய் | வைத்தீஸ்வரன் கோயில் | மயிலாடுதுறை, மாயவரம் சீர்காழி பஸ்மார்கத்தில் 16கி.மீ தூரம். |
| 4. | புதன் | திருவெண்காடு | சீர்காழியிலிருந்து பூம்புகார் போகும் வழியில் 16கி.மீ. தூரம். |
| 5. | குரு | ஆலங்குடி | கும்பகோணத்திலிருந்து நீடாமங்கலம் பஸ்மார்க்கத்தில் |
| 6. | சுக்கிரன் | கஞ்சனூர் | ஆடுதுரைக்கு அருகில் |
| 7. | சனி | திருநள்ளாறு | காரைக்கால் அருகில் |
| 8. | ராகு | திருநாகேஸ்வரம் | கும்பகோணத்திலிருந்து ஏழு கிலோ மீட்டர் தூரத்தில் |
| 9. | கேது | பெருமால் | திருவெண்காட்டுக்கருகில், காளஹஸ்தி |

# ஜாதகரீதியாக ராசி ஸ்தானமும், காண்டமும்

| வரிசை | ஸ்தானம் | காண்டத்தில் சொல்லப்படுபவை |
|---|---|---|
| 1. | தனுர்லக்னம் | ஜன்மத்தில் கிரகதசைகள், தன்னுடைய, மேலும் தாயார், தகப்பனார், கணவன் மனைவி பெயர், விவாகம், வேலை, தொழில், சகோதர, சகோதரிகள், குழந்தைகளின் எண்ணிக்கை மற்ற 11 ஸ்தானங்களுக்கான பொதுவான சுருக்கமான சோதிடம். |
| 2. | செல்வம் | செல்வம், சுருக்கமான சோதிடம், செல்வம், குடும்பத்தில் கல்வி பேச்சு சொத்து முதலிய மற்ற குடும்ப விவரங்கள். |
| 3. | தன்மை/பராக்கிரமம் | சகோதர சகோதரிகளுக்குள்ளான விபரங்கள், சாகஸம், தைரியம் செயல்களின் வர்ணனை. |
| 4. | சகோதரன் | ஆபரணங்கள், பங்களா, வாகனங்கள், சொத்து மற்ற வளர்ச்சிக்கான சாதனங்களின் சுகம் முதலியன. |
| 5. | அபத்யம் | குழந்தைகள் உண்டா இல்லையா அவர்களுடைய பிறப்பு, இறப்பு, கல்வி, வருங்காலம், தத்து எடுக்கும் வாய்ப்பு, எதிர்பாராத அதிர்ஷ்டம் கல்வி முதலியன. |
| 6. | சத்ரு/வியாதி | ஆரோக்கிய சம்பந்தமான தடைகள், வேலையில் கஷ்டம், விபத்துக்கள், ரகசிய எதிரிகள் முதலியன. |
| 7. | கணவன்/மனைவி | விவாகம், எப்போது யாருடன், குடும்பவாழ்க்கை, வலிமையுள்ள சத்துரு, கலகத்திற்கான வாய்ப்பு .. |
| 8. | மரணம் | வாழ்க்கை பூராவும் உள்ள கஷ்டங்கள், விபத்துக்கள், ஆயுள் பாக்கியம், மரண தேதி கிரக நிலை முதலியன. |
| 9. | பித்ரு | தகப்பனார், அவருடையசொத்து, யாத்திரை, பெரியவர்களின் சேர்க்கை, தானதர்மங்கள் முதலியன. |
| 10. | கர்மா | வேலை, உத்யோகம், இட மாற்றுதல் வேலையில் முன்னேற்றம், பதவி உயர்வு வேலையின் கௌரவம், மான நஷ்டம், உயர்வு, தாழ்வு, வேலையில் கஷ்டம் முதலியன |
| 11. | லாபம் | லாபம், மித்திரர்கள், அந்நிய விவாகம், ஆசைகள் (Ambitions) பெயர், பராக்ரமம் நீதி, பணம் முதலிய |
| 12/ | செலவு | செலவு, வெளிநாட்டு பயணம் தெய்வபக்தி, அடுத்த ஜன்மத்தை பற்றிய குறிப்புகள், மோட்சம் முதலியன. |

# நண்பர் திரு.போபே :- ஹோஷியார்பூர் ப்ருகுசம்ஹிதை

**- ஒரு உதாரணம்.**

ஸ்ரீ போபே மகாராஷ்டிராவில் லேபர் கோர்ட்டில் நீதிபதியாக இருந்து சமீபத்தில் ஓய்வு பெற்றார். தற்சமயம் ஹைகோர்ட்டில் வழக்கறிஞராக இருக்கிறார். ஸ்ரீ போபே 'மதுரஞ்சன்' என்ற பெயரில் எழுதவும் செய்கிறார். சில நாவல்களும், நாடகங்களும் மராத்தியில் இயற்றியிருக்கிறார். அவர் 25 வருடம் முன் பஞ்சாபில் ஹோஷியார்பூரில் ப்ருகு நாடியை பார்த்திருக்கிறார். அவருடைய அனுபவம் பின்வருமாறு.

ஸ்ரீ போபேயும் அவருடைய நண்பரும் வட இந்திய பிரயாணம் செய்து கொண்டிருந்தனர். டில்லியில் அவருடைய நண்பர்கள், பஞ்சாபில் பக்ராநங்கல் அணையைப் பார்க்கச் சென்றால், ஹோஷியார்பூர் சென்று ப்ருகு நாடி சோதிடம் பார்க்குமாறு சொன்னார்கள். அவருடைய நண்பருக்கு அதில் விருப்பமில்லாததால் ஸ்ரீ போபே மட்டும் தனியாக ஹோஷியார்பூரில் ரேல் மண்டியில் இருந்த அம்ருதனாந்த ப்ருகு சாஸ்திரியின் சோதிட நிலையத்திற்கு சென்றார்.

இந்த நிலையத்திற்கு நம்முடைய ஜாகத்தை எடுத்துச் செல்வது அவசியம். நிலையத்தில் ஆயிரக்கணக்கான ஜாதகங்கள் இருக்கின்றன. அந்த ஜாதகங்களுடன் நாம் கொண்டு சென்ற ஜாதகத்துடன் ஒப்பிடுதல் அவசியம். இரண்டும் சரியானவுடன் அந்த ஜாதகத்தை வைத்துக் கொண்டு சோதிடம் சொல்லப்படும்.

போபே அவர்கள் நிலையத்திற்குச் சென்றவுடன் அதற்கு முன் வந்திருந்தவர்கள் தங்கள் தங்கள் ஜாதகங்களை ஒப்பிட்டு பார்த்துக் கொண்டிருந்தனர். அவர்களை கேட்ட போது ஒரு வாரமாக அவர்கள் தேடியும் பலனில்லை என்று சொன்னார்கள். போபே மிகவும் நம்பிக்கையிழந்தார். அவர் ஒரு நாளில் ஜாதகத்தைப் பார்த்து விடலாமென்றிருந்தார். அவர் கேந்திரத்தில் முக்கியமான வரான அம்ருத ப்ருகுவை சந்தித்து தன்னுடைய ஆவலைத் தெரிவித்தார். அம்ருத் ஜீயின் உதவியால் அவருடைய ஜாதகம் சீக்கிரம் கிடைத்துவிட்டது. அதன் பிரகாரம் ஆருடம் சொல்லப்பட்டது. அது பின் வருமாறு.

இது ராஜயோக ஜாதகம். ஜாதகரின் பெயர் மதுகர். தந்தையின் பெயர் ராம். (உண்மையான பெயர் ராமச் சந்திரன்). பூர்வ ஜென்ம பெயர் தத்தாத் ரேயர். அந்தக் காலத்தில் பணக்கார க்ஷத்திரிய குடும்பத்தில் ஜெனனம். பம்பாயில் பெரிய அதிகாரி. இந்த ஜென்மத்தில் ஜாதகர் பூனாவில் ச்ராவண கிருஷ்ண பக்ஷம் பிதமையில் சனிக் கிழமையன்று ஜெனனம். நண்பருடன் பிரயாணத்தில் வந்த போது தனது 37வது வயதில் தன்னுடைய ஜாதகத்தை பார்க்க இவ்விடம் வந்திருக்கிறார். (எல்லாம் சரி)

ஒரு சகோதரரின் மனைவி 1973ல் மரணம். இரண்டாவது சகோதரர் 75-76 வயதில் விபத்து மேலும் கஷ்ட ஜீவனம். ஜாதகருக்கு 'சுக்ர மங்கள' யோகம் காரணமாக இரு திருமணம். ஒரு மகன், ஒரு மகள். ஜாதகர் நியாயாதிப்தி போன்ற உயர்ந்த சர்க்கார் வேலை. தனது 45 வயதில் பாக்ய விருத்தி. எழுத்து மூலம் பிரசித்தி அடைவார் (இது எல்லாம் முற்றிலும் சரி).

ஸ்ரீ போபே 13.10.1973ல் பம்பாய் சாயா சாஸ்திரி ஸ்ரீ பாபு பாயிடமும் தன்னுடைய ஜாதகத்தை பார்த்திருக்கிறார். அவருடைய கருத்துப்படி அது மிகவும் சுருக்கமாகவும், ஆனால் சம்பவங்கள் சரியில்லை என்று சொல்கிறார்.

சோதிடம் பற்றி அவர் சொன்ன ஒரு ருசிகரமான தகவல் என்னுடைய வக்கீல் தொழில் நன்றாக நடந்து கொண்டிருந்தது. அந்தத் தொழிலை விட்டுவிட்டு நியாயாதிபதி வேலையை ஏற்க நேர்ந்தது. சுதந்திரமாக தொழில் செய்வதை விட்டு சர்க்கார் வேலையில் மாத சம்பளம் வாங்கிக் கொண்டு வேலை செய்வது எனக்குப் பிடிக்க வில்லை. அதனால் நான் என் தகப்பனார் மேல் கோபம யிருந்தேன். அந்த சமய நியாயாதிபதியின் ஒரு மா சம்பளம் எனது ஒரு நா வருமானத்திற்கு சரியா இருந்தது. ஆனா

தகப்பனாரின் பிடிவாதத்திற்கு முன்னால் என்னால் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆனால் பருகு நாடியைப் பார்த்தவுடன் நான் தகப்பனாரை கோபித்துக் கொண்டது அநாவசியம் எனப்பட்டது. நான் நீதிபதியாவேன் என்று என் ஜாதகத்திலேயே எழுதியிருந்தது. தகப்பனார் ஒரு காரணம் தான். பிறகு தகப்பனாரிடம் இதையெல்லாம் சொல்லி அவரிடம் மன்னிப்புப் பெற்றேன்.

போபேயின் சோதிடத்தில் அவருடைய பிறந்த ஊர் பூனா என்று சொல்லப்பட்டிருந்தது. நான் 'பூனாவா' 'பூனே'யா என்று கேட்டேன். அவர் 'புனே' அல்ல 'பூனா' என்று சொன்னார். அந்த சமயத்தில் 'மும்பய்' 'பாம்பே' தகராறு மகாராஷ்டிரத்தில் இருந்தது. இது சமயம் ப்ருகு சோதிடத்தில் 'புனே' அல்ல 'பூனா' என்ற மாயாவாதத்தை ஏற்படுத்தி ஒரு கட்டுரை எழுதியிருந்தார்.

போபேக்கு தன்னுடைய தகப்பனாரின் பேரில் உள்ள கோபம் பிருகு சோதிடத்தினால் நீங்கியது. அதே மாதிரி என்னுடைய (ஆசிரியருடைய) ஒரு பிரமையும் நாடி சோதிடத்தால் நீங்கியது எவ்வாறு என்பதை பார்ப்போம்.

அப்போது எனக்கு ஸ்ரீநகரில் வேலை. மனைவி சௌ. அல்கா முதல் பிரசவத்திற்கு தாய் வீடு பூனாவிற்கு சென்றிருந்தாள். ஸ்ரீ நகரில் அப்போது சந்தோஷ் டிராபி கால்பந்து போட்டி நடந்து கொண்டிருந்தது. சில பந்தயங்களை நேரிலும், சில பந்தய வர்ணனையை ரேடியோவிலும் கேட்டுக் கொண்டிருந்தேன். பெங்கால் டீமில் அப்போது சின்மயா சாடர்ஜி ஒரு பிரசித்தி பெற்ற விளையாட்டு வீரா. 'சின்மய்' 'சின்மய்' என்று உச்சரிப்பது எனக்கு பிடித்திருந்தது. நான் என மனதில் ஆண் குழந்தை பிறந்தால் 'சின்மய்' என்று பெயர் வைக்க வேண்டும் என்று மனதில் நினைத்துக் கொண்டேன். பையன பிறந்தவுடன் என் மனைவிக்கு என்னுடைய விருப்பத்தை தெரிவித்தேன். அவளுக்கும் பெயா பிடித்திருந்தது. என்னுடைய பையனின் பெயர் நானே வைத்தது என்று நான நினைத்திருந்தேன்.

ஆனால் சில நாட்கள் முன்னால் என்னுடைய மகனின் சோதிடத்தை அகஸ்திய நாடியில் பார்த்த போது பையனின் பெயர் சின்மய, தகப்பன் பெயர் சசிகாந்த் தாயின் பெயா அல்கா என்று துல்யமாக எழுதப் பட்டிருந்தது. இந்த பனை ஓலை 2, 2½ ஆயிரம் வருடங்களுக்கு முன்னால் எழுதப் பட்டது. பையனின் பெயர் நான் வைத்தது அல்ல 2000, 2500 வருடங்களுக்கு முன்னாலேயே வைக்கப்பட்டது என்பதை அறிந்து எனது அந்த பாவனை நான்தான் பெயரிட்டேன் என்று எப்படி இருக்க முடியும்?

விதியினால் நிச்சயிக்கப் பட்ட சம்பவங்கள் நிகழ்வதற்கு நாம் காரணம் மட்டும் ஆகிறோம். உண்மையில் நாம் எதுவும் செய்வதில்லை. விதி நம்மை அவ்விதம் செய்யச் செய்கிறது என்பத இந்த சிறிய சம்பவத்தால் நிரூபிக்கப் படுகிறது. நாம் விதியின விளையாட்டு பொம்மைகளல்லவா?




With all Divine Blessings

ॐ SRIM

**NARBAVEE**

**Good will Prevail for all**

**Ramani Guruji**

Sakthi Arulkudam
18, Alamelupuram
Madras - 73.



**NARBAVEE**

With Best Complements From







**SIVA ENTERPRISES**
PALLAVARAM
MADRAS

# ஸ்ரீ அகத்திய நாடி - ஒன்பதாவது காண்டமும், ஆசிரியரும்

முதல் பொது காண்டத்தை பார்த்து பல நாட்கள் ஆயின. இடையில், மற்ற காண்டங் களைப் படித்தல், சாந்தி தீக்ஷை காண்டத்தில் சொல்லியுள்ள உபாயங்களை அநேகமாக செய்து முடித்தாய் விட்டது. கோடை விடு முறைக்காக மனைவியும் மக்களும் பூனா சென்றிருந் தனர். அலுவலக வேலை நிமித்தம், எனக்கு விடுமுறை கிடைக்கவில்லை. வீட்டில் தனிமையும், நேரமும் இருந்ததால், ஒரு நண்பரால் கொடுக்கப்பட்ட ஆன்மீக சம்பந்தமான புத்தகங்களைப் படிப்பதில் ஆர்வமேற்பட்டது. டிவி, சினிமா, செய்தித்தாள்கள், சங்கீதம் முதலியவற்றில் ஈடுபாடு குறைந்தது. இந்த மனநிலையில் அகஸ்தியர் நாடி ஒன்பதாவது காண்டத்தை படிக்க நிச்சயித்தேன். காண்டத்தின் புத்தகம் கைக்குவந்தது. ஆனால் நாடி கேந்திர நண்பர் ராஜேந்திரனுக்கு நாடி சுவடியிலுள்ளவற்றை மொழி பெயர்த்துச் சொல்ல நேரமில்லை. பிறகு, ஓரிரவு அந்த பகுதி எனக்குக் கிடைத்தது. அவற்றில் சிலவற்றை வாசகர்களின் முன்னால் வைக்கிறேன்.

இதுவரை படித்த எந்த காண்டத்திலும் நிகழ் காலத்தில் நடக்கக்கூடிய சம்பவங்களைப் பற்றி யாதொன்றும் குறிப்பிட்ட அனுபவம் ஏற்படவில்லை. மிகக்குறைந்த நேரத்தில் அவ்விதம் கருதுவதும் உசிதமலல. ஆனால் இநத காண்டத்தைப் பற்றி எந்த அனுபவம் ஏற்பட்டதோ அதுவும் சாதாரணமாய் கருத முடியாது. என்னுடைய அனுபவங்களைக் கூறுவதன் காரணம், என்னுடைய அனுபவங்களை கூறுவதில ஒரு தடுமாற்றம், தற்புகழச்சி வாசகர்களின் மனதில் ஏற்பட்டிருந்தாலும் கூட, இது குறித்த அனுபவங்கள் மிகவும் ருசிகரமானவை.

ஒன்பதாவது காண்டத்தை படித்த பிறகு, உடனே பாண்டிச்சேரி செல்ல நேர்ந்தது. அந்த சமயத்தில் எனக்கு ஏற்பட்ட "ஒரு அற்புதமான நாள்". அனுபவங்களையும் வாசகர்களின் முன்னால் வைக்கிறேன்.

நாடி சோதிட ஓலை ஒன்றின் பெரிதுபடுத்தப்பட்டுள்ள புகைப்படம். அதில் முதல் வரியில் இரண்டு குறிகளுக்கிடையில் "சசிகாந்தன்" என்று பொறிக்கப்பட்டுள்ளது.



# ஒன்பதாவது காண்டம்
## (ஆசிரியரைப் பற்றிய குறிப்புகள்)

ஓம் நமோ நாராயணுய. ஸ்ரீ அகஸ்திய முனிவர் ஒன்பதாவது காண்டத்தில் நிகழ் காலத்தைப் பற்றி சொல்லும் போது, ஓம்காரத் த்வனிக்கு வணக்கம் செலுத்துகிறார். அர்த்த நாரியான நடராஜரையும் தேவி ஈஸ்வரியையும் பிரார்த் தனை செய்து ஒரு புண்ணிய வானான மகனின் நிகழ் காலத்தைப் பற்றி சொல்கிறார்.

தனுர் லக்னம், கன்யா ராசியில் பிறந்த ஜாதகர் பாக்கியவான்; நன்னடைத்தை யுடையவர்; அறிவாளி; உயர்ந்த குணங் களையுடைய இந்த ஜாதகரின் பெயர் சசிகாந்த். தகப்பனார் பெயர் ஜனார்தன்; தாயாரின் பெயர் மங்களா. முதல் மனைவி உயிருடன் இல்லை. இரண்டாவது மனைவியின் பெயர் அல்கா. ஜாதகரின் 45 வயதில் இந்த சோதிடம் சொல்லப்படுகிறது.

இந்த சமயம் உங்களின் (ஜாதகரின்) மனதில் நல்ல, ஆன்மீக சிந்தனைகள் அதிக மாக இருக்கின்றன. இது பின்னால் வரக்கூடிய ஆன்மீக வளர்ச்சிக்கு ஊன்று கோலாகும். ஜாதகரின் (ஆசிரியரின்) வேலை தேசத்தின் பாதுகாப்பு சம்பந்தப்பட்டது. தகப்பனார் இல்லை. ஆனாலும் அவர் உங்கள் மனதில் அருவமாக அவ்வப்பொழுது தோன்றிக் கொண்டிருக்கிறார். உங்கள் தந்தைதான் உங்கள் ஆன்மீக பாதைக்கு வழிக்காட்டி. அவரின் ஆசீர்வாதத்தால், மேலும் சில சாதுக்களை, பெரிய மனிதர்களை சந்தித்து இந்த ஆன்மீக குருக்களின் ஆசியின் மூலம், சமுத்தி ரத்தின் அலைகள் போல் உங்கள் மனதில் அவ்வப் பொழுது எண்ண அலைகள் தோன்றிக் கொண்டிருக்கும். நாற்பத்தாறு அல்லது நாற்பத் தெட்டு வயதில் தங்களுக்குப் பேரும் புகழும் கிட்டும். தங்களின் இந்த புகழுக்கு சந்நியாசிகள் உதவுவார்கள்.

இதுவரை உங்கள் ஆயுட் காலத்தில் எந்த குருக்களின் உபதேசமும் ஆசீர்வாதமும் கிட்டியதோ, அவை தங்களின் ஆன்மீக வளர்ச்சிக்கு அடி கோலும். தங்கள் தற்கால ஆன்மீக எண்ணங்களால் ஞானப் பிராப்திக்கான நல்ல சமயம் கைக்கூடி வருகிறது. இதன் காரணமாக, கூடிய சீக்கிரமே தாங்கள் ஒரு ஆசானை சந்திக்க நேரிடும். அவருடைய ஆசீர்வாதத்தாலும் உபதேசத்தாலும் தங்கள் ஆன்மீக வாழ்க்கையில் நல்லதோர் மாற்றம் ஏற்படும். அம்மகான் திருவண்ணா மலையில் இருக்கிறார். ஒரு அமாவாசையன்று அவரைக் காண வந்த பக்தர்களுக் கிடையே, உங்கள் மேல் அவர் தம் அருள் உபதேசங்கள் பொழியும். அப்போது உங்களோடு இன்னொருவரும் அதற்கு சாட்சியாவார். அம் மகானின் பெயர் இலங்கை அதிபதி இராவணனைக் கொன்ற அந்த ராம் என்ற சொல்லுடன் குமார் என்ற சொல்லும் இணைந்திருக்கும். அவர் மூலம் உங்களுக்கு ஆத்ம ஞானம் கிட்டும் (யோகி ராம் சூரத் குமார் என்ற மகான் ஆனவர் திருவண்ணாமலை யில் இருக்கிறார். பனை விசிறியைக் கையில் வைத்துக் கொண்டு விசிறிக்கொள்வ தால், அவரை மக்கள் 'விசிறி சாமி' என்றும் 'விசிறி பாபா' என்றும் அழைப்பதாக நாடி சோதிடர் திரு. இராஜேந்திரன் அவர்கள் சொல்கிறார்.

நிகழ்காலத்தில் ஒரு குரு பூர்ணிமா தினத்தன்று நீங்கள் பாண்டிச்சேரியில் உள்ள அரவிந்தர் ஆசிரமத்திற்குச் செல்வீர்கள். அங்குள்ள தியான அறையில், தியானத்தில் அமர்ந்து, மனதை ஒரு நிலையில் இருத்தி, மௌன நிலையில் இருக்கும் போது, தங்களின் மனதில் ஒரு ஆன்மீக தரிசனம் நிகழும். அப்போது வாழ்க்கையிலேயே மறக்க முடியாத ஒரு அனுபவம் கிட்டும். அந்நிலையில் உங்கள் மனதில் ஒரு ஜோதி பிம்பம் தோன்றும்.

அதற்குப் பின் வாழ்க்கை மிகவும் அர்த்தமுள்ளதாக இருக்கும். வாழ்க்கையின் கடைசிக் காலத்தில் ஒரு நாள் சூர்யாஸ்தமனத்திற்கும், சந்திரோதயத்துக்கும் இடையே (மாலை) சிவதரிசனம் நிகழும்.

அகத்திய முனிவர் இவ்வாறு ஒன்பதாவது காண்டத்தை முடிக்கிறார்

20.5.1994

சுபம்.

குறிப்பு :- ஆசிரியருக்கு நாடி சோதிடம், மே 20, 1994-ல் நாடி சோதிடரால் உரைக்கப் பட்டது. ஆசிரியரின் 45 வயதில் அவர் நாடி சோதிட நிலையம் சென்றிருக்கிறார். சோதிடத்தில் உரைத்தபடியே ஆசிரியர் தம் 46வது வயதில், திருவண்ணாமலையில் யோகி ராம் சூரத் குமார் ஆசிரமத் திற்கும் பாண்டிச்சேரியில் உள்ள ஸ்ரீ அரவிந்தர் ஆசிரமத்திற்கும் சென்றுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.




With Best Compliments From

**RANK ADVERTISEMENT SERVICES**



**A Anantha Ramaiah**
General Manager

129, Valluvarkottam High Road,
Nungambakkam,
Madras - 600 034.
Tel : 8258803

# ஒரு அற்புதமான நாள்

ஒவ்வொருவருடைய வாழ்க்கையிலும், சில நேரங்கள் வர்ணிப்பதற்கு அப்பாற்பட்டவை. ஆனாலும் நிகழ்காலத்தில் எண்ணங்களில் தாழ்வு மனப்பான்மை, நிராசை முதலியவைகளை போக்கக் கூடியதும், ஆன்மீக வளர்ச்சியில் தூண்டக்கூடிய சில உந்து சக்திகள், வழிகாட்டி என்ற முறையில் அவைகளை அடைவதற்கான முயற்சிகளில் எவ்வளவு தூரம் இந்த நேரங்கள் உதவியாக இருக்கிறது என்பதை பார்ப்போம்.

புத்த பூர்ணிமா :- புத்தர் ஞானம் பெற்ற மேலும் நிர்வாணம் (மோட்சநிலை) பெற்ற நாள். பாண்டிச்சேரியில் அரவிந்தாச் ரமும், திருவண்ணாமலையில் யோகி ராம்சூரத்குமாரின் தரிசனமும், இரண்டு சிநேகதர்களின் மூலம் ஒரு வாய்ப்பு கிடைத்த போது, இதர பௌர்ணமியைப் பற்றி எப்படி கருதுவேன். இவ்விதம் மனதில் நினைத்து நான் மே 24-ம் தேதி மாலை 6.30 மணிக்கு பாண்டிச்சேரி பஸ்ஸில் நுழைந்தேன். பிரயாணத்தில், ஒரு மார்வாடி இளைஞனோடு கூட த்யானம், ஆசான் இவர்கள் குறித்து பேச்சு நடந்தது. 10 மணிக்கு பஸ் பாண்டிச்சேரி அடைந்தது. உடனே ஒரு ரிக்ஷா பிடித்து அரவிந்தாச்ரமத்தை நோக்கி செல்லத் துவங்கினேன். இரவு நேரத்தில் ஆச்ரமம் அமைதியாக இருந்தது. இரவு 11 மணிக்கு ஆச்ரமத்தின் தியான அறை மூடப்படும் என்றறிந்து, உடனே தியான அறையில் நுழைந்தேன். தியான அறையில் முன்னால் ஒரு அலங்கரிக்கப்பட்ட சோபாவும், என் முதுகுக்கு பின்னால் ஸ்ரீ அரவிந்தரின் படமும், அன்னையின் படமும் இருந்தன. அவைகளுக்கு முதுகு காட்டிக்கொண்டு உட்காருவதா என சிறிது நேரம் யோசித்தேன். சுத்தமான, வெண்மையான படுதாக்கள் மூலம், மந்தமான பிரகாசமே இருந்தது. நான் சப்பணமிட்டுக் கொண்டு நன்றாக உட்கார்ந்து கொண்டேன். தியானத்தில் அமரும் போது எப்படி உட்காருவது என்பது குறித்து அங்கு எழுதப்பட்டிருந்த திலிருந்தும், ஏற்கனவே படித்ததிலிருந்தும் புரிந்து கொண்டிருந்தேன். சிறிது நேரம் பிராணாயாமம் செய்த பிறகு மனத்தை ஒரு நிலையில் நிறுத்த முயற்சித்தேன். இரண்டு மூன்று தடவை முயற்சித்த பிறகு நெற்றியும், தலையும் கனத்தது. கண் மூலம் நிலைக்கு வந்தேன். 5 அல்லது 6 நிமிடங்களுக்கு ஏதோ நடப்பது போல் உணர்ந்தேன். மனதில் எண்ண அலைகள் குறைந்து, ஓர் ஈர்ப்பு சக்தி ஏற்பட்டது. கண்களை மூடிய நிலையில் பின்னால் காலடிச் சத்தம் கேட்டது. 11 மணிக்கு பின்னால் ஆசிரமத்திற்குள் ஒருவரும் வரமுடியாது, கதவுகள் சாத்தப் பட்டிருந்தன. இதன் பின்னால் திரும்பவும் தியான நிலைக்கு வந்தேன். சில நிமிடங்க ளுக்குள் என் இமைகளுக்குள் ஓர் பிம்பம் (புள்ளி) தோன்றியது. அங்கு ஏதோ இருக்கிறது என்று தோன்றியது. அந்த புள்ளிக்கு அருகே கறுப்பான மேகங்கள் பரவியிருப்பது போல் தோன்றியது. பிறகு சிறிது நேரம், தன்னை உணர்ந்த போது, மந்தமான ஒளியில், படுதாக்கள், வழுவழுப்பான துணியால் மூடப்பட்ட படுக்கை (சோபா)கள் வெண்மை நிறமாகத் தெரிந்தன. சிறிது நேரம் நீல நிறம் தெரிந்தது. இது மேகங்களினால் கூட தோன்றியிருக்கலாம் என்று தோன்றியது. இந்த பிம்பம் சிறிது நேரம் வெள்ளையாகவும், பிரகாசமாகவும், சில சமயம் மேகக்கூட்டங்களக்கு பின் னால் மறைந்திருப்பது போல் காணப்பட்டதால், மந்தமாகவும் காணப்பட்டிருக்கலாம். ஏதோ கண்ணாமூச்சி விளையாட்டு போல் தோன்றியது. தோன்றவும் மறைவதாகவும் இருந்தது. இது என்ன? இது யார்? இம் மாதிரி நிலையில் பல நிமிடங்கள் கடந்தன. மறுபடியும் யாரோ வரும் காலடி ஓசை கேட்டது. பிறகு நான் விழிப்படைந்தேன். அப்போது 11 மணி அடிக்க 30 நிமிடமிருந்தது. 12-15 நிமிட நேரத்தில் எந்த அனுபவம் ஏற்பட்டதோ அதனால் மனதில் அமைதிகிட்ட வில்லை. யாதொரு பயனுமில்லை.

ஆசிரமத்திலிருந்து கிளம்பினேன். 15, 30 நிமிடங்களுக்கு பின் ஒரு லாட்ஜில் அறையில் கட்டிலில் கிடந்தேன். தியான நிலையில் அமர்ந்தேன். இரவு 11-45 மணி காலமடைந்த தகப்பனாரின் நினைவு வந்தது. சில சமயம் அமைதியாகவும், சில சமயம் சிரித்த முகமாகவும் தெரிந்தது. ஒவ்வொரு சாது மகாத்மாவின் உருவம் தெரிந்தது. ஸ்வாமி பிரக்ஞானந்த சரஸ்வதி எனது முதுகைத் தட்டிக் கொண்டிருந்தார். மகாத்மா மகராஜ் எனது நெற்றியில் விபூதியை இட்டுக் கொண்டிருந்தார். அன்னை ஆனந்த மயீ மாதாவை பல்லக்கில் சுமந்து போய்க் கொண்டிருந்தேன். குருக்களின் சரித்திரத்தில் வர்ணிக்கப்பட்ட நரஸிம்ஹ சரஸ்வதி, டாக்டர் உப்லேகர் முதலியவர்களின் தரிசனம் கிட்டியது. மேலும் சிலரும் தோன்றினர். யார் யார் என்று ஞாபகமில்லை. மந்தமான ஒளியில் கடிகாரத்தை நோக்கினேன். 12 மணி அடிக்க 10 நிமிடமிருந்தது. பிறகு எண்ண அலைகளை தவிர்த்து மறுபடியும் தியான நிலையில் அமர்ந்தேன். பிறகு அதே மாதிரி ஒளி வட்டம் (பிம்பம்) தோன்றியது. சில சமயம் வையலட் நிறமும், சில சமயம் கருமையான மேகங்கள் சூழ்ந்தன. அப்போது தான் அது வெறும் உணர்வு மட்டும் அல்ல உண்மை என்ற றிந்தேன். கற்பனையல்ல. வெள்ளை பிம்பம் பெரிதாகிக் கொண்டே போயிற்று. பௌர்ணமி நிலா மேகக் கூட்டங்களிடையே கண்ணா மூச்சி விளையாடுவது போல் இருந்தது. அப்போது திடீரென்று பகவான் புத்தரின் உருவம் தோன்றியது. புன்னகை, சாந்தமான கண்கள், என்னை அழைத்துக் கொண்டிருந்தன. அது புத்தர் தானா அல்லது வேறு யார்? மறுபடியும் தியான நிலை யிலிருந்து தன்னிலை அடைந்த போது 12.2 நிமிடம் ஆகியிருந்தது. முதுகு இடுப்பு வலித்தது. கை கூப்பி அமர்ந்த போது தாயாரின் ஞாபகம் வந்தது. அதற்கு பிறகு மெள்ள மெள்ள கண்ணயர்ந்தேன்.



With Best Compliments From

Hirachand Butala
Khed ( Ratnagiri )
Maharashtra - 415 709

# "உன்னுடைய வேலை நடக்கும்"
## நாள் : 25-5-1994

பாண்டிச்சேரி அரவிந்தாஸ்ரமத்திற்கு மறுபடியும் வருகை தந்தேன். தாமரைப்பூ மேலும் ஊதுபத்தி வாங்கிக் கொண்டு சமாதியில் அஞ்சலி செலுத்தினேன். தியான அறையில் காலைக் கூட்டம் இருந்தது. மகிழ்ச்சிகரமான சூழ்நிலை. 20 நிமிடம் தியானத்தில் ஆழ்ந்திருந்தேன். நேற்றையது போன்ற வெள்ளையான புள்ளி வடிவம் காணப் பெறவில்லை. பிறகு ஆசிரமத்தின் மற்ற பகுதிகளை பார்வையிட்டேன். யோகி அரவிந்தரின் சமாதியிலும், அன்னையின் சமாதியிலும் அஞ்சலி செலுத்தியவாறு பலர் இருந்தனர். நானும் அவர் களைப் போல தலையைச் சாய்த்து உட்கார முயன்றேன். ஆனால் கால் வலித்தது. 2,3 புத்தகங்கள் வாங்கிக் கொண்டு திருவண்ணாமலையை நோக்கி கிளம்பினேன். அரவிந்தரின் வாழ்க்கைச் சரித்திரத்தைப் படித்துக் கொண்டே பஸ் திருவண்ணாமலையை அடைந்தது. கடும் வெயில் வியர்வையினால் மிகவும் களைப்படைந்த நிலையில், போலீஸின் உதவியுடன் ஒரு ரிக்ஷாவைப் பிடித்தேன். ரிக்ஷாக்காரன் என்னை யோகி ராம் சூரத் குமாரின் ஆசிரமத்தில் இறக்கிவிட்டான். மதியம் 1 மணி இருக்கும். யோகியார் மாலை 4 மணியிலிருந்து 6 மணி வரை இருப்பார் எனத் தெரிந்தது. போஜன சாலையிலிருந்து சோறும் சாம்பாரும் வாங்கி சாப்பிட்டு விட்டு யோகியாரின் வருகையை எதிர்பார்த்து அமர்ந்திருந்தேன். சிறிது சிறிதாக 50,60 பேர் சேர்ந்தனர். 4 மணிக்கு யோகியார் வந்தார். ஆண்களும் பெண்களும் யோகியாரின் எதிரில் தனித் தனியாக அமர்ந்தனர். நடுவில் ஒரு அடி வழி விடப்பட்டது. யோகியாரின் வலது பக்கம் அன்னை தேவகி (அவரது பெயர் நான் பின்னால் அறிந்தேன்) மற்றும் பல பெண்கள் பஜனை செய்து கொண்டிருந்தனர். பல நேரம் கழித்து யோகியார் கையில் விசிறியும், பாத்திரத்தையும் எடுத்துக் கொண்டு எழுந்தார். இடையிலான வழியில் நடக்க ஆரம்பித்தார். ஒவ்வொருவரையும் பார்த்துக் கொண்டு கடைசி வரை சென்று திரும்புவார். ஒரு தடவை பெண்கள் பக்கமும், ஒரு சமயம் ஆண்கள் பக்கமும் தன்னுடைய கண்களால் நோக்கினார். இவ்விதம் 4, 6 தடவை சுற்றிக் கொண்டு சிலரை ஆசிர்வதித்தும், சிலருக்கு அவர்களுடைய சந்தேகங்களைப் போக்கிக் கொண்டும் இருந்தார். நடை வேகமாகவும், பார்வை தீட்சண்யமாகவும் இருந்தது. பின் தன்னுடைய இடத்திற்குச் சென்று இராம நாமத்தில் ஈடுபட்டார். ஒரு தடவை அவருடைய சிஷ்யர் கேட்ட போது "மலையில் மழை பொழிகிறது" "நன்றாக மழை பொழிகிறது" என்று சொல்லி தன்னை மறந்த நிலையிலிருந்தார். இம்மாதிரி 3 தடவை நடந்த பிறகு மறுபடியும் சுற்றி வர ஆரம்பித்த போது, நான் அவரை என்பால் கவருவதற்கு அவருடைய காலடியில் வணங்குவது நலம் என நினைத்தேன். அருகில் அவருடைய காலடி ஓசை கேட்டது. திடீரென்று 'உனது வேலை முடிந்துவிடும்' என்று குரல் கேட்டது. நான் நிமிர்ந்து நோக்கியபோது அது யோகியாரின் குரலாக இருந்தது. ஆண்களை நோக்கி அவர் பேசி இருக்கலாம் என்று தோன்றியது. அவர் பிறகு தன்னிடத்திற்கு போன பிறகு அது யாராக இருக்கலாம் என்று யோசித்தேன். அவர் யாரை நோக்கி அவ்விதம் சொல்லி யிருக்கக்கூடும். தங்களுடைய வேலை என்ன என்று யாரும் சொல்லவில்லை. யாரை குறிப்பிட்டு அவர் அவ்விதம் சொன்னார் என்றும் புலப்பட வில்லை. அங்கு அமர்ந்திருந்த வர்கள் எல்லோரும் தமிழ் மொழியில் பேசுபவர்கள். ஆண்கள் பக்கம் திரும்பி ஹிந்தியில் அவர் மொழிந்தது ஆச்சரியம்!

அதற்குள் வெளியில் கூட்டம் கூடி விட்டது. எங்களைப் போன்று யோகி யாரின் அருகில் இருந்தவர் களை வெளியில் போகச் சொன்னார்கள். நான் யோகி யாரை வணங்கிவிட்டு, பிறர் வெளியே போ என்று சொல் வதற்கு முன் கிளம்பினேன். வெளியில் அறங்காவலர் ஸ்ரீசுப்ரமணியத்தை சந்தித்தேன். நான் என்னை அறிமுகம் செய்து கொண்டேன். யோகியார் பனாரஸ் இந்து சர்வ கலாசாலை மாணவர். கடந்த 40, 50 வருடங்களாக ரமணாச்ரமம், அரவிந்தாச்ரமம் முதலிய இடங்களில் வசித்த பிறகு இங்கு திருவண்ணாமலையில் வசித்து வருகிறார். தன்னை 'அழுக்கு சாமியார்' என்று குறிப்பிடுகிறார். அவருடைய பேரில் ஒரு ட்ரஸ்ட் ஏற்பட்டு அதன் மூலம் ஒரு கட்டிடம் எழுப்புவதாக சொன்னார். மேலும் விபரங்கள் அறிந்து நான் பஸ் நிலையத்தை அடைந்தேன். அப்போது மனதில் பல விதமான எண்ணங்கள் தோன்றின. யோகியாரின் உருவம், சூழ்நிலை ஒருவரையும் குறிப்பிடாமல் அவர் பேசியது. இது குறித்து மனது சஞ்சலப்பட்டது. பிரயாணத்தால் மிகவும் களைப்பாயிருந்தேன். அதற்குள் பெரிதாக மழை பெய்ய ஆரம்பித்தது. பருவ நிலையும் அழகாக குளிராக மாறியது. என் மனநிலையிலும் ஒரு அமைதி ஏற்பட்டது. 'உன்னடைய வேலை முடியும்' என்ற வாக்கியத்தில் மூழ்கினேன். அங்கு எல்லோரும் ஏதோ ஒரு 'வேலையாக' த்தான் வந்திருந்தனர். அவர்கள் எல்லோ ருடைய வேலையும் முடியுமா? ஒவ்வொருவர் வேலையும் முடியலாம். ஆனால் நான் என்ன வேலையாகச் சென்றேன். நான் அவரை தரிசிக்கத்தான் சென்றேன். எனக்கு அகஸ்தியர் நாடி சோதிடத்தில் நம்பிக்கை இருந்தால் நான் எப்பொழுது ஒரு ஆசானைத் தேட சென்றேனோ வழிகாட்டுவது அவர் வேலையன்றோ? அந்த நேரத்தில் தான் அவர் உன் வேலை முடியும் என்று சொன்னார். குறைந்த பட்சம் எனக்காக.

மனதில் எற்பட்ட கவலை நீங்கியது. மேகமும் கலைந்தது. ஜன்னலுக்கு வெளியே பௌர்ணமி நிலவின் தரிசனம் ஏற்பட்டது. அதை பார்க்க பார்க்க நேற்று தோன்றிய ஒளி வட்டம் ஞாபகம் வந்தது. எப்படி சந்திரன் மேகக் கூட்டத்தினிடையே தோன்றியும் மறைந்தும் காணப்பட்டானோ அவ்விதமான ஓர் சித்திரம் கண் முன் தோன்றியது. அப்போது காண்டத்தில் வர்ணிக்கப்பட்ட 'பிம்பம்' என்ற சொல்லின் அர்த்தம் புலப்பட்டது. ஜோதியல்ல, சாந்தமான, அழகான ஒளி! ஏரியின் தெள்ளிய நீரில் சந்திரனின் பிரதி பிம்பம். நான் என்னுடைய இரண்டு நோக்கத் திலும் வெற்றியடைந்தேனா! இதற்கு பதில் வருங்காலம் தான் சொல்ல முடியும். வேறு யார் தான் சொல்ல முடியும்.

★

With Best Compliments From

B.R. Padhye
Aram Appartments
Deccan Gymkhana, Pune-411 004

# மறுபடியும் ஒரு முறை யோகி ராம் சூரத் குமார்

1994 மே 25-ம் தேதி சந்திப்புக்கு பிறகு மறுபடியும் ஒருமுறை யோகியாரின் ஆசிரமத்திற்கு செல்ல விரும்பினேன். நான் மனைவியிடம் பாண்டிச்சேரி செல்லலாம் என்று சொன்னேன். நீ அங்கு கடை களில் வாங்குபவற்றை வாங்கி யதன் பின் ஆச்ரமம் செல்வோம். இரவு உணவு விடுதியில் தங்குவோம். மறுநாள் திருவண்ணா மலையில் சென்று யோகியாரை சந்தித்துவிட்டு மாலைக்குள் திரும்பிவிடுவோம் என்று சொன்னேன். குழந்தைகளின் படிப்பு, கோடையின் கடுமை, அதிகப்படி செலவு முதலிய காரணங்களைச் சொல்லி தட்டிக் கழிக்க விரும்பினாள். ஆயினும் என்னுடைய பிடிவாத குணத்தைத் தெரிந்து கொண்டு செல்ல ஒப்புக் கொண்டாள்.

பாண்டிச்சேரி சென்று விட்டு யோகியாரின் திருவண்ணாமலை ஆச்ரமத்திற்கு நாங்கள் காலை 9.30 மணியளவிற்கு சென்றடைந்தோம். பழங்களும், இனிப்புகளும் வாங்கிச் சென்றிருந்தோம். யோகியார் ஆசிரமத்திற்கு வெளியே தனியே இருக்கிறார். பாக்ஸியில் ஆசிரமத்திற்கு வந்தார். அவருடன் பஜனை பாடிக் கொண்டு அவருடைய 3, 4 சிஷ்யைகள் வந்தார்கள். யோகியார் வந்தமர்ந்தார். யோகியார் எவருடனும் பேசுவதோ, சந்திப்பதோ கிடையாது. நடுவழியில் நடந்து கொண்டே தன்னுடைய கையால் வந்திருக்கும் ஜனங்களை ஆசிர்வதிப்பார். மறுபடியும் சென்று உட்காருவார். இதன் நடுவே இடைவிடாமல் பஜனை நடந்து கொண்டே யிருந்தது.

யோகியாரின் காலில் விழ வேண்டும், என்னுடைய வேதனைகளைச் சொல்ல வேண்டும், ஆறுதல் அடைய வேண்டும் என்பது தடுக்கப்பட்டிருந்ததால் முடியாத காரியமாயிருந்தது. திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. "ஒரு கடிதம் எழுதிக்கொடுக்கலாம். என்ன ஆவதோ ஆகட்டும்" என்று ஒரு கவரில் 'நான் சசிகாந்த் ஓக், அகஸ்திய நாடி ஜோதிடம் பார்த்ததில் தங்களை சந்திப்பேன் என்றதன் காரணமாக, தங்களைப் பார்க்க வந்திருக்கிறேன். மேலும் என்ன செய்ய வேண்டும் என்பதை தாங்கள் நிச்சயித்து என்னை ஆசீர்வாதம் செய்ய வேண்டும் என்று இந்தியில் எழுதி தயாராக வைத்திருந்தேன். தரிசனம் காண வந்தவர்களை உள்ளே அனுமதித்த போது நான் சீக்கிரம் சென்று யோகியாரின் அருகில் நின்றேன். மிக்க சமீபம் சென்ற போது அவருடைய சீடர்கள் 'பின்னால் போ, பின்னால் போ' என்று கத்தினார்கள். நான் யோகி யாரின் அருகில் சென்று வணங்கி கவரை அவருக்கு எதிரில் வைத்தேன். ஆசிரமத்தின் Trustee சுப்ரமணியம் அப்போது அங்கு வந்தார். அவர் அந்த கவரை எடுத்து தனது ஜேபியில் போட்டுக் கொண்டு என்னை திட்டினார். தாங்கள் இவ்வளவு அருகில் எப்படி வந்தீர்கள்? இதுதான் தாங்கள் விமானப் படையில் கற்றுக் கொண்ட கட்டுப்பாடா? நான் பேசாமல் வழியிலேயே உட்கார்ந்து கொண்டேன். என்னுடைய மனைவியின் முகம் வாடிப் போயிற்று. கவரை யோகி யாரிடம் சமர்ப்பிக்க எனக்கு வேறு உபாயம் தோன்ற வில்லை.

கடிதம் இந்தியில் எழுதப் பட்டிருந்ததால் டிரஸ்டி கவரை யோகியின் எதிரில் மறுபடியும் வைத்தார். யோகியார் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு அவர் கவரைப் பிரித்து கடிதத்தைப் படித்தார் என்று தோன்றியது. பஜனை மிகவும் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. என் மனம் அமைதியானது. யோகி மறுபடியும் சுற்ற ஆரம்பித்தார். 3, 4 தடவை சுற்றியபோது எனது பார்வை அவரிடமே இருந்தது. பிறகு தலையை குனிந்து கொண்டு உட்கார்ந்தேன். இதற்குள் எனதருகில் காலடி ஓசை கேட்டது. அதுவும் நின்றது. யோகியார் என்னருகில் அமர்ந்து கொண்டார். என்னுடைய கையை தனது கையில் வைத்துக் கொண்டு, என்னைப் பார்த்துக் கொண்டே, என்னுடைய விரல்களை தடவிக் கொண்டே கேட்டார் "நீ எந்த மாகாணத்திலிருந்து வருகிறாய்" என்னுடைய சரீரம் குலுங்கியது. எனது கண்கள் கண்ணீர் சொரிந்தன. தழுதழுத்த குரலில் 'மகாராஷ்ட்ரா' வெகு நேரம் எனது கையைப் பிடித்துக் கொண்டிருந்த பின் தனது இருக்கைக்குச் சென்றார். சிறிது நேரம் கழித்து தனது அருகில் என்னை அமரும்படி கூப்பிட்டார். இந்த பிச்சைக்காரன் மறுபடியும் மாலை பார்க்க விரும்புகிறான். ஆகையால் மாலை தரிசனத்தின் போதும் இரு என்று கட்டளையிட்டார். ஒரு அமெரிக்க கவிஞன் அவர் பெயரில் இயற்றிய கவிதைப் புத்தகத்தில் ஒன்றை என் கையில் கொடுத்து 'சசிகாந்த் ஓக்' என்று என்னை ஆசிர்வதித்த போது அவரது முகபாவம் கம்பீரமாயிருந்தது. அவர் வாயிலிருந்து சில சொற்கள் வெளிவந்தன. கண் பார்வை என் பேரில் நிலைத்திருந்தது. மற்ற பக்தர்கள் இவ்விதம் யோகியார் அடிக்கடி என்னை கூப்பிட்டு, தொட்டு, ஆசீர்வாதம் செய்வதைப் பார்த்து ஆச்சரியப் பட்டனர்.

மதியம் சாம்பார் சாதம் சாப்பிட்டு, மாலை தரிசனமும் முடித்துக் கொண்டு கிளம்பும் போது டிரஸ்டி சுப்ரமணியத் திடம் கூறினேன். "இன்று நான் மிகவும் மகிழ்ச்சியாயிருக்கிறேன்". அவரும் என் கையைப் பிடித்துக் கொண்டு, "கண்டிப்பாக யோகியாரின் கிருபை தங்களுக்கு பரிபூரணமாக இருக்கிறது. அடிக்கடி வந்து கொண்டிருங்கள்" என்று சொன்னார்.

பஸ்ஸில் 160 கி.மீ. தூரம் பயணம் செய்து நாங்கள் வீடு திரும்பிய போது இரவு 12 மணி ஆகியிருந்தது. இருந்த போதிலும் என்னுடைய மனைவியை ஒன்பதாவது காண்டத்தில் யோகியாரின் தரிசனம் பற்றி குறிப்பிட்டிருந்ததைப் படிக்கச் சொன்னேன். அதில் "ஒரு அமாவாசையன்று யோகியாரின் தரிசனம் ஏற்படும்" என்று சொல்லப்பட்டிருந்தது. பக்கத்தில் வேறு ஒருவரும் இருப்பார். யோகியாரின் தரிசனத்திற்கு வந்த பக்தர் களின் முன்னிலையில் யோகியார் உங்களை ஆசிர்வதித்து, தங்களை மகிழ்விப்பார்.

"கால நிர்ணயம்" காலண்டர் சுவற்றில் தொங்கிக் கொண்டிருந்தது. அதை எடுத்துப் பார்த்தேன். 7.8.1994 ஞாயிறு அன்று அமாவாசை திதியாக இருந்ததை என் மனைவியிடம் காண்பித்தேன்.

★

Sole Distributors
for this book
Giri Trading Agency
58/2, TSV Koil St.,
Madras - 600 004.

# சென்னையில் நாடி கேந்திரங்களுக்கு செல்வதற்கான போக்குவரத்து மேலும் தங்கும் வசதிகள்

இது வரை அறிந்த விஷயங்களிலிருந்து நாடி சோதிடக் கலையின் கவர்ச்சி மேலும் அனுபவங்களை அடைய அவர்கள் நேரில் வருவது மிக்க நலம். ஒரு சுலபமான வழி நாடி கேந்திரத்தில் கொடுப்பதற்காக தங்களுடைய கட்டை விரல் ரேகையை ஒரு கார்டில் பதிவு செய்து (ஆண்களானால் வலது - பெண்ணானால் இடது) போவதற்கான நேரமும் குறித்துக் கொண்டு முன்னதாக போவதற்கான ஏற்பாடுகளை செய்து கொள்ள வேண்டும். சில நாடி சோதிட நிலையத்தில் 2,3 நாட்கள் தங்க நேரிடும்.

விடுப்பு பிரயாணச் சலுகை (L.T.C.) உடைய யாத்திரிகர்கள், தங்கள் சிநேகிதர்களைச் சந்திக்க, நாடி சோதிடம் பார்க்க, இது சம்பந்தமாக பரிகாரங்களை நாடி கோயில்களுக்கு யாத்திரை இவை ஒன்றாக வைத்துக் கொள்ளலாம். யாத்திரைக்கு யாத்திரை, பரிகாரத்திற்கு பரிகாரம். ஒரிருவரின் கட்டை விரல் அடையாளங்களை கையில் எடுத்துக் கொண்டு சென்றால் செலவை பகிர்ந்துக் கொள்ளலாம்.

யாத்திரை செல்வதற்கு சென்னை மற்றும் எல்லா இடங்களிலும் பஸ் வசதிகள் உள்ளன. ஒரு கைடு மூலமாக செல்லும் மார்க்கத்தையும் நேரத்தையும் குறித்துக் கொள்ளவும்.

கோயிலுக்கு குளித்து விட்டு 8 மணி அளவில் செல்லவும். வெளியில் கடைகளில் அர்ச்சனை சாமான்கள் கிடைக்கின்றன. கோயில் குருக்களிடம், அர்ச்சகரிடம், தங்களுடைய பெயர், கோத்திரம், நட்சத்திரத்தைச் சொல்லவும். தேங்காய், பழம் முதலியவை ஆண்டவனை அர்ச்சித்து பிரசாதம் திருப்பிக் கொடுக்கப்படும். சில கோயில்கள் 12 மணி முதல் 4 மணி வரை மூடியிருக்கும். நேரத்தில் செல்லாவிட்டால் நேரம் வீணாகும். ஆகையால் சாப்பாட்டில் அதிக நேரம் செலுத்தாமல் இருப்பது நலம்.

தங்குவதற்கு, எக்மோர் (ரெயில்வே ஸ்டேஷன்) அருகே மஹாராஷ்டிர மண்டபம், மற்ற யாத்திரிகள் அந்தந்த மாநிலத்திற்காக தனித்தனி தங்குமிடங்கள் உள்ளன. ஓட்டல்களிலும் 50/75 ரூபாயில் தங்கும் அறைகள் கிடைக்கும். அங்கு சாப்பாட்டில் அரிசி, சாதம், சாம்பார், ரசம் அதிகமாக உள்ளது. சாந்தி பரிகாரங்கள் முடிந்தவுடன், நம் வேலை முடிந்தவுடன், நம்முடைய பொருளாதார நிலைக்குத் தகுந்தவாறு ஏதாவது ஒரு பொருள் நாடி சோதிட நிலையத்திற்கு வழங்கலாம் என்பது என்னுடைய கருத்து.

சென்னைக்கு ரயில் மார்க்க வசதிகள் பூனா, ஷோலாப்பூர், ரேணிகுண்டா மார்க்கமாக மூன்று வண்டிகளும், டில்லி போபால், நாக்பூர், விஜயவாடா மூலமாக மூன்று வண்டிகளும், கல்கத்தாவிலிருந்து கட்டாக், புவனேஸ்வர், ராஜமுந்திரி மூலம் மூன்று வண்டிகளும் உள்ளன. இரவு சென்றடைந்தால் மறுநாள் நாடி சோதிட நிலையத்திற்கு காலை 8 மணியளவில் சென்றால் முன்னதாக கவனிக்க இயலும். பஸ் 51J, 18J, 21J, 51J மூலம் தாம்பரத்திற்குச் செல்லலாம். மின்சார ரெயில்வேயில் தாம்பரம் கடைசி ஸ்டேஷனாகும். ரமணிகுருஜியின் காகபுஜண்டர் ஆசிரமம் தாம்பரத்திலிருந்து கிழக்கே 5 கி.மீ. தொலைவில் பாரத் என்ஜினீயரிங் காலேஜ் அருகில் உள்ளது. அகஸ்தியர் நாடி நிலையம் செல்ல வேண்டுமென்றால் மேற்கு தாம்பரத்தில் Phillips Hospital பின்னால் உள்ளது.

நுங்கம்பாக்கம், தி. நகர், பல்லாவரம் முதலிய இடங்கள், கடற்கரை - தாம்பரம் மின்சார ரயில் மூலமும், பாரீஸ் கார்னரிலிருந்து பஸ் மூலமும் செல்லலாம். இந்த இடங்களிலுள்ள நாடி சோதிட நிலையங்களின் முகவரிகள் 25-ம் பக்கம் கொடுக்கப்பட்டுள்ளன.




With Best Compliments From

**Naven Studio**



**E. Megnath**

Authorised Dealers in
Photo goods

Velacherry Road,
Tambaram East,
Madras - 600 059.
Tel : 2377171



With Best Wishes From

**CHEIRO NUMEROLOGIST**

A/13, Vijay
33, Halls Road, Egmore
Madras - 600 008
Tel : 8268192

Consulting Hours
7 to 10 a.m.
6 to 9 p.m.

# முடிவுரை

[illegible]சோதிடக்கலை என்பது ஒரு [illegible]மான விஷயம். அதை [illegible] வக்கெவவளவு [illegible]மோ அவை யனைத்தும் [illegible]றைவே.

ஆயிரக்கணக்கான வருடங்களுககு முனனால மிகவும் சிரமம் வாயநத நிலையிலும், ஏதோ ஒரு முக்கியமான குறிக் கோளை அடிப்படையாகக் கொண்டு, ஓலைச்சுவடிகளில எழுத[illegible]ட்ட நாடி சோதிடமானது இந்தியாவில் [illegible]ங்கெங்கு உள்ளது என்பது தான் [illegible]ப்புத்தகத்தை எழுதும் நோக்கம் [illegible]கும். ரிஷி முனிவர் களால் [illegible]ப்பட்ட இப்பெரிய காரியத்தின் ம[illegible]மையை அளவிடுவது நம் அறி[illegible]கும் சாமர்த்தியத்துக்கும் அப்பா[illegible] பட்டதாகும். ஆனால், எந்தக் [illegible]ரியம் நம்மை உத்தேசித்து செய்ய[illegible]ட்டதோ, அந்தக் காரியத்தை மதிப்பது நமது கடமையல்லவா? அதற்காக நாம் நன்றி சொல்ல வேண்டாமா? இந்த சோதிடத்தை அலசி ஆராய்ந்து என்னால் எழுதப்படும் இப் புத்தகம் அவ்வாறு நனறி செலுத்தும் ஓர் சுலப வழியாகும். வாசகர்களின் மனதில் இம்மனோபாவத்தை தோற்றுவிப்பதுதான் இப்புத்தகத்தை எழுதும் நோக்கமாகும்.

சோதிடம் பாாப்பவர்கள், தங்கள் வருங்காலத்தில் சோதிடத்தில் கூறியவாறு நடக்கிறதோ என்று ஆராய்ந்தால் அதில் சில மாறுபாடும் இருக்கலாம். வருங்காலத்தில் என்ன நேரிடும்? என்ற ஊகம் சில சமயம் வருங்காலம் நம்மிடம் வரும்போது அதில் சில குறைகள் இருக்கக்கூடும். அது சரியோ, தவறோ நம் முனிவர்கள், ரிஷிகள் நமக்காக மிகவும் சிரமப்பட்டு எழுதியுள்ளவை நம் வரை வந்திருக்கிறது என்ற சமாதானம் சாதாரணமானதலல.

நாடி சோதிடம் பற்றி இதுவரை பலர் எழுதியிருக்கக் கூடும். ஆச்சரியப்படத்தக்க இந்நாடி சோதிடக் கலையானது இந்திய கலாச்சாரத்தின் ஒரு விலை மதிப்பற்ற பொக்கிஷமாகும். 200 வருடங்களுக்கு முன்னால் சத்ரபதி சிவாஜியின் வம்சத்தில் வந்த சரபோஜி மகாராஜா இப்படிப்பட்ட இலட்சக்கணக்கான சுவடிகளை புதுப்பித்து இந்த பொக்கிஷத்தை உயிருட்டி யுள்ளார். மானிட இனத்திற்கு செய்யப்பட்ட இந்த தொண்டு மறக்க முடியாதது.

நமது முன்னோர்களால் எழுதப்பட்ட இந்த சோதிடக் கலை பின்னால் வரக்கூடிய பரம்பரை குறித்து எழுதப் பட்டது போல் நம்மால் இயலுமா? இயலும். விஞ்ஞான முறையில் ஆராய்ந்து பொது மக்களின் மூட நம்பிக்கைகளைப் போக்கும் முயற்சியில் ஈடுபட்டி ருக்கும் நிறுவனங்களுக்கு இது ஒரு சவாலாகும்.

கைக்கட்டைவிரல் அடையாளத்தை மட்டும் வைத்துக் கொண்டு ஒருவரின் பெயரைச் சொல்ல முடியும் போது, ஒரு குற்றவாளியின் கைக்கட்டை விரல் ரேகையின் மூலம் அவன் பெயரைக் கண்டுபிடிக்க முடியாதா? கண்டறிய முடியும்.

பொதுவாக, நாடி இலக்கியததை அறிய, சென்னை அல்லது அதற்குத் தெற்கே செல்ல நேரிடும். இந்தியாவின் மற்ற பகுதிகளிலும் இந்த நாடி கேந்திரத்தை தோற்றுவிக்க முடியாதா? இதனால் அந்தந்தப் பகுதிகளில் உள்ள மக்கள் பயனடைய முடியாதா? இவ்விஷயம் பற்றி ஆய்வது அவசியமாகும். வாசகர்களில் சிலர் முன்வந்து, பல்வேறு மொழிகளில் மொழி பெயர்க்க முயற்சித்தால் நாடி சோதிடக் கலைஞர்களால் உதவ முடியும்.

இப்புத்தகத்தில் எழுதப் பட்டிருக்கும் கருத்தானது குறிப்பிட்ட சோதிடத்தைப் பற்றியதாகும். இதன் மூலம் ஒரு ஜாதகரின் பெயர், பெற்றோர் பெயர், கணவன்/ மனைவியின் பெயர், பிறந்த நாள, மாதம், வருடம் யாவும் பனை இலையில் எழுத்தாணியால எழுதப்பட்டதாகும். இவறறை, கட்டைவிரல் ரேகை அலலது ஜாதகத்தை வைத்துக் கொணடோ சொல்ல முடியும். இந்த சோதிடம உண்மை என்று செய்தித் தாளிலும், மற்ற புத்தகங்களிலும் எழுதி பரப்புவது இக்கட்டுரையாளரின் நோக்கமல்ல. இது பொய் என்று சொல்லவும் இயலாது. ஆகையால இது உண்மையா பொய்யா என்று வாசகர்களே ஆராய்ந்து அறிவது அவசியமாகும்.

தஞ்சாவூரிலுள்ள சரஸ்வதி மகால், வைத்தீஸ்வரன் கோவில் நாடி நிலையம், ரமணி குருஜி ஆகியவர்களை சந்தித்துப் பேசி இக்கலையின் சரித்திரம், பரவிய விதம், இந்நாடு மற்றும் மக்களின் வருங்காலம், வருங்காலத்தில் நடக்கவிருக்கும் யுத்தங்கள், அதன் மூலம் ஏற்படக்கூடிய அழிவுகள் ஆகியவற்றை அறிய வேண்டியுள்ளது. இந்தக் கட்டுரையைப் படிக்கும் வாசகர்கள் இவற்றைப் பற்றி தங்கள் கருத்தையும் அனுபவத்தையும் எழுதினால், அதை வரவேற்கிறோம்.

## வாசகர்களுக்கு ஒரு தாழ்மையான வேண்டுகோள்

இந்த புத்தகத்தை/கட்டுரையைப் படிக்கும் வாசகாகள இக்கட்டுரை யாளரை நேரிலோ தபால் மூலமோ சந்தித்து, இந்த நாடி சோதிட நிலையத்தில் தங்கள் காரியம் சீக்கிரம் முடிய முயலலாம். ஆனால் விமானப் படை அதிகாரி என்கிற முறையிலும் இட வசதி இல்லாததாலும் இக்கட்டுரை யாளா அனைவரையும் உபசரிக்க இயலாது. விமான நிலையப் பாதுகாப்பை முன்னிட்டு, என்னை நேரில் சந்திக்க இயலாமல் போக நேரிடலாம். ஆகையால் என்னை சந்திப்பதில் நேரம் கடத்தாமல், நாடி சோதிட நிலையத்தையே நேரில அணுகுவது நலம்.

தன் வருங்காலத்தையும் கடந்த காலத்தையும் அறியும் ஆசையை தானாகவே நிறைவேற்றுவது நலம்தானே?

# நாடி சோதிடம்

நாடி இலக்கியம் இந்தியா வின் இலக்கியம் மற்றும் கலாசாரத்தின் ஒரு விலை மதிப்பற்ற சொத்தாகும். பல மகரிஷிகளின் மூலம் ஆயிரக்கணக்கான வருடங் களுக்கு முன் லட்சக்கணக் கான கோடிக்கணக்கான மக்களுக்காக தமிழ் மற்றும் பல மொழிகளில், எழுத்து மூலமான நாடி சோதிடப் புத்தகங்கள் குறித்து விங் கமாண்டர் சசிகாந்த ஓக் மூலம் 'நாடி சோதிடம்' பற்றி இந்த புத்தகம் மூலம் சொல்லப்படுகிறது.

சோதிடம் என்பது ஒரு மிகவும் ருசிகரமான விஷயம். ஒவ்வொருவரும் 'வரப்போவது என்ன' என்பதை அறிவதில் ஆவலுள்ளவாகளாயிருக்கி றார்கள். கைகட்டை விரல் அடையாளத்தை மட்டும் வைத்துக் கொண்டு, உங்களுடைய தாய் தந்தையா் பெயா், மனைவியின் பெயா், தங்கள் பெயா், பிறந்த தேதி, வாரம், மாதம், வருடம் முதலியன புராதனமான ஓலைச்சுவடிகளில் பாா்த்து, உங்களுடைய வருங் காலத்தைப் பற்றி அறிய முடிவதென்றால் அதை அற்புதம் என்றில்லாமல் எப்படி வா்ணிப்பது.

நாடி சோதிடம் என்கிற புத்தகத்தில் விங் கமாண்டா் ஓக், இதில் ஆவல் கொண்ட தன்னுடைய மற்றும் இதராகளுடைய அனுபவங்களையும் விவரிக்கிறாா். இதைத் தவிர இது குறித்து ஆவல் கொண்டவா்கள் அறிவதற்காக, நாடி சோதிடா்களின் விலாசம் மற்றும் தேவையான இதர விஷயங்களையும் சேகரித்து, சோதிடக் கலை வல்லுனா் களின் அனுபவங்களையும், விஞ்ஞான முறையில் அனுகும் சிலரின் கேள்விகளுக்கு விளக்கங்களையும் அளிப்பதில் வெற்றி கண்டிருக் கிறாா். தங்களிடம் நாடி சம்பந்தமான தங்களுக்காகவே சொல்லப்பட்ட சோதிடம் பற்றி அறியும் ஆவலை அதிகப் படுத்த பல நாடி புஸதகங்கள் இயற்றப்பட்டிருக்கலாம்.

விங் கமாண்டா் ஓக் அவா்களின் நாவல் (அந்தார சாயா) மராத்தியில் வெற்றி கண்டிருக்கிறது. தைனிக புடாலி, சப்தாஹிக் சஹ்யாத்ரி முதலிய பத்திரிகையின் மராத்தி வாசகா்களாலும், 'ராஷ்டிரீய சஹாரா' வின் இந்தி வாசகா்களாலும் நன்கு அறிந்தவா்.

'நாடி சோதிடம்' புத்தகம் மராத்தி மொழியில் வெளி வந்திருக்கிறது. மற்றும் ஆங்கிலம், தெலுங்கு, குஜராத்தி மொழிகளிலும் தயாராகின்றது.

'நேஹா பிரகாசன்'


விற்பனையாளா்கள்



**கிரி டிரேடிங் ஏஜென்ஸி**

58/2, மேற்கு மாட வீதி, மைலாப்பூா், சென்னை - 4.

(அனைத்து நாடி நிலையங்களிலும் கிடைக்கும்)

**இந்த புத்தகம் எல்லா நாடி நிலையத்திலும் கிடைக்கும்**




**LEO ELECTRIC & BATTERY COMPANY**
**MFGRS. OF DRY BATTERY CELLS**

*Office & Factory : G. 11, MIDC, Kupwad Block, Sangli 416 436*
*Maharashtra, India Tel : (O) 74358 (R) 72362*